ஸ்ரீ ராம் ஜெயம்

# பானுமதி கலியாணமென்னும்
# கிருஷ்ணன் வீமன்
# சண்டை நாடகம்

## விநாயகா துதி விருத்தம்

காலனை யுதைத்த மூலக் காரண யீசன் மைந்தா
சூலமாமழுவுங்கொண்டு சுழிமுனையாகும் தேவா
நூலிழை பானுமதி நுகர் திருமணத்தை பாட
பாலகன் விக்கினேசன் பாதமே பணிகுவாமால

## துரியோதனன் வருகிற விருத்தம்

மணிகொண்ட கிரீடமது பள பளவென
மாமன் தம்பி சகுனி சல்லியனுஞ் சூழ
துணிவுடைய வீரர்களும் அருகில் தாழ
துரோணருடன் பீஷ்மருமே பெரியோர் வாழ்க
பணிவுடைய மாதிருபால் கவரி வீச
பாடியோ நட்டுவர்கள் பண்புபேச
அணிந்த பல பணிகளுமே தக தகென்ன
அரவகொடி துரியராஜன் கொலுவதானேன்

## தரு

பரிதிவடிவையொத்த பாரில் புகழும் பெற்ற
பணாக்கொடி ராஜன் வந்தேன் நல்ல (ப)
பாரவரெணமுக சூரரும் சூழ்ந்திட
அரிய பேரிகைசத்தம் அண்டம் கிடுகிடென்ன
தரைதன்னில் மன்னரெல்லாம் தாளடி பணியமுன்ன
(சுள்) தரித்திடும் மணிமுடி தக தகவென்ன
சரிபரிசேனைகள் அணியணி பன்ன (ப)
எந்தன் குல தெய்வமான சொந்த அம்மானும் சூழ
ஏகினேன் கொலுவில் வந்தேன் வேத
இருபெரியோர்களும் பரிவுடன் வரவே ஏகினே
கந்தமணிந்த மாதர் கவரிசாமரை போட
தோந்தோம் தோமென்று ஜய மங்களம் பாட
(சுள்) துடுக்குள்ள தம்பிகள் அடிக்கிடந்தோங்க
படிபுவிமன்னர்கள் வணங்கியே தாழ்ந்திட ப)

## துரியன் கவி

பெருமை என் மாமாகேளும் பேசுவேன் வார்த்தையமன்று
அருமைமிந்த சுபத்திரைக்கா அளித்துவந்தோம் பெரிமன்று

ஒருசேதியிது நாளொன்றுமே வரவுங்காணேன்
பொருமை என் சகுனிமாமா புகல்பதில் இதற்குதானே

வசனம்

கேளும் சகுனிமாமா சுபத்திரையை மணம்புரியும் பொருட்டு என் சிற்றப்பனாகிய விதுரமகாராஜனை யனுப்பி பலராமரிடம் பரியமாத்தி முகூர்த்த நாளிட்டுவந்து நாலு நாளாகிவிட்டது இன்னம் இதற்கு ஒருவிதமான பதிலும் காணவில்லை இதற்கென்ன செய்யலாம் சகுனிமாமா

சகுனி தரு

உலகத்தில் கெடிபெற்று நலமுற்றருகோனே
உள்ளங்கசிய வேண்டாம் துரியபூபா
நலமுள்ள பலராமர் நிலைதப்பி நடப்பாரோ
நல்ல குலத்தில் வந்த துரியபா

துரியன் தரு

கட்டழகியான அந்தகன்னி சுபத்திரைமீது
காயதிகமானேன் மாமாவே
வட்டமுகமுடைய வஞ்சியாளை மணந்
வாழ வழிசொல்லிடும் துரியபூபா கட்

சகுனி தரு

வணங்காமுடி தரித்த வல்லவா துரியபூபா
வஞ்சிசுபத்திரை தன்னை மணம்புரிகுவாய்
கணை எய்யும் மகனேநீ காதலால் வெல்லப்போறாய்
துணையாக நானிருந்து தருசாய் முடிப்பேன்மணம்
கடுகமணமுடிப்பேன் துரியபதியே

துரியன் தரு

குந்தகமில்லாத எந்தன் குலவிளக்காய்
குடும்பத்தில் வந்திட்டீரே தெய்வமாக
உந்தன் அருளினாலே உத்தமி சுபத்திரை
சிந்தை மகிழ்ந்திட சீக்கிரம் மணம்செய்ய் கு
மருமனே அஞ்சவேண்டாம் யாயிவர் தாயன்தானும்
உருமைநல் சேதி கொண்டு ஓடோவருகப் போரார
வருமைகள் இல்லாமன்னுவகையுடன் கொலுவில்நாமும்
பெருமையாய் வீற்றிருப்போம் பிசகது வதிடீமாமே

நாரதர் வருகிற கவி

மலைதனைக்குடை பிடித்தமாயவன் தனக்குபோன
கலைதியுணர்ந்த சிலன் நாவிகாம்பரமுடுத்தி
நிலைதவள்ளத்தோரான னிருபாதம்போற்றி
வருந்தும் நிலைதனை சுற்றும் தூய நாரதர் வருகின்றாரே

# கிருஷ்ணன் வீமன் சண்டை நாடகம்

தரு

அண்டர் கண்டுபேவாழ்த்ததொண்டர்கள்தினம் போற்ற
அருமுனிநாரதன் வந்தேன் கலகம்செய்ய
மண்டலத்தையளந்த மாயன் தனக்குபேரன்
கண்டவர்களையோட்ட கலகம் செய்திடுகிறேன்
ள் காசினியோர்களும் பேசிபுகழ்ந்திட
மாசில்லா அறு பூசையும் புரிந்திட அண்
இன்று நாளிலே யானும் நின்று கலகம்செய்ய
யேகுவேன் அஸ்தினபுரமே வேடிக்கையாகவே (யே)
குன்று எடுத்தமாயன் கோதைசுபத்திரையை
கன்றுபார்க்குண நிர்க்கு நல் மணம் செய்தசேதி
காட்டி துரியனுக்கு காட்டியே கலகம்
மூட்டியேசெய்ய ஓட்டமாய் வாரேன் அ

நாரதர் தரு அஸ்தினபுரம் செல்வது

அத்தினபுரம் தன்னைநாடியே நாரதமுனி
அதிவிரைவாய் ஓடிவாரேனே கலகம்செய்ய
கையில் வீணைதம்பூர் கொண்டுமே சிவயோகமுனி
காடுமலை கடந்துவாராரே வேடிக்கையாக
கரிமாலும் செய்தசூதையை நாரதமுனி
கனிவுடனே சொல்லவாரே சந்தோஷமாக

துரியன் தரு

தவமுனிவரே துகளிலா பதமே
துரியன் மிகபணிந்தேன் நாரதா என்னை
பிரியமாய் காக்கவேண்டும் சிரதரே

நாரதன் தரு

வணங்காமுடி பூண்ட பணிக்கொடியோனே
வாழ்குவாய் எந்தநாளும் நீடுழியாய் நான்
வந்தேன் உந்தனைக்காண காடுவழியாய்

துரியன்வேறு தரு

உலகத்தில் செடிபெற்ற நாரதாரா நீரும்
ஓடிவந்தசேதி என்ன சிரதரே
கலங்கமில்லாமலே கண்டதை சொல்வீரே
நடுங்கி வந்தவிபரம் சொல்லிடுவாய் எந்தனுக்கு

நாரதர் தரு

வந்தவிபரமதை ராஜதீரனே நான்
வருத்துரை செய்திடுவேன் ராஜதீரனே
அந்திரத்தில் வாழும் அண்டர்தேவர்கள் கூடி [பார்
ஆதிமாயன் தங்கையாளை அளிதகார்வில்லிஜயர்க்குவென்

துரியன் கவி

சடைமுடியோரே நீரும் சாற்றியது உண்மைதானே
படைபெரும் துவாரகை போய்ப்பார்க்க பேவந்ததாலே
நடந்ததோர் விபரம் தன்னை நானினியறிந்திட்டேனே
திடமாக சொல்லுமையா திருமணம் முடிக்கவேண்டும்

நாரதன் தரு

அருவின் மிகுந்தபலராமன் என்னை
அனுப்பனாரே இந்த சோமன்
வெறுப்பது கொள்ளாதே வெண்மதி குலத்தோனே
கெலிப்புகொண்டு நீயும் கிளம்பியே செல்லுவாய்

துரியன் தரு

அண்ணா சகுனி கர்ணா வாருங்கள் இப்போ
ஆனந்த சந்தோஷம் பாருங்கள்
நன்னான்மறையுணர்ந்த நாரதர் சொற்படி
உடனிதவாத்தியம் ஊத வை சொல்லுங்கள

நாரதன் தரு

குதிக்கின்ற குதிப்பெல்லாம் நாசம் அங்கு
கூறுவேன் நடந்ததே மோசம்
மதிப்புவேண மட்டும் மயவன் செய்தானே
மன்னா துரியா நீயும் மர்மங்களரியாயோ

துரியன் தரு

சின்னமாமன் மாயக்கண்ணன் எனக்கு
சிறுவரிசை வண்ணன்
பின்னங்கள் வந்திட போகுமோ எனக்குமே
இன்னிலமரிந்திட யேதுவேன துருசாக

நாரதர் தரு

எதுரேன் கென்றிட்ட துரியா உனக்கு
எத்துகள் தெரியுமோ சரியா
பாகுசேர்மாயவன் பற்குணனைக்கண்டு
பாணத்தை விட்டுமே பாவைசெய்தான் தொண்டு

துரியன் தரு

பச்சமேனியன் எனக்கிருக்க பஞ்ச
பசங்களைவிவேறோ பெருக்க
அச்சங்கள் கொள்ளேனே ஆதியிருக்கையில்
அட்டவுடன் விண்டதாரும் அருமுனிநாரதனே

நாரதர் தரு

வில்விஜயனை கைக்காட்டியே கண்ணன்
வேண்டியே சேர்ந்தானே கூட்டியே

மல்லுசெய்ய நீ மன்னனே தள்ளாதே
கள்ளன் சேதிதன்னை காணுத்தபோலே
துரியன் கவி
அய்யனே சகுனிமாமா அவுஷிகள் சேர்ந்ததையோ
மெய்யது சோர்ந்து எந்தன் மேனியம் வாடலானேன்
நையுதே எந்தனுள்ளம் நாரதன் சொல்லைக்கேட்டு
வையக முண்டகிருஷ்ணன் வகைமோசப்செய்தான்
[யாமா
நாரதர் கவி
போனதுபோகட்டுமப்பாபூபனே துரியா கேளும்
பானுவின் ஒளியாளான பாலராமர் சுதனிதன்னை
தானங்கள் செலவுசெய்து தையலை மணந்தீரானல்
வானவர் எல்லோருக்கும் வல்லவனிவனே என்பார்
துரியன் தரு சிந்து
சிங்காரரதமீதிலேரி நலல
தினகரன் போலவே வாராரே பாரீ
தங்கமணிமுடியதுமின்ன அழக
கையலர்கள் வந்துமிகசாமரற பனன
டங்காமல்லரி சின்னம் ஊத வெகு
பாங்கானமந்திரி வந்துமே மோத
துவாரகா புரிதன்னைக்கண்டேன் அந்த
தோகையை கேழ்க்கவே எண்ணமுங் கொண்டேன் சி
பொதுவசனம்
இவ்விதமாக துரியோதனனும் சகுனியும் பலராமரை காணும் பொருட்டு துவாரகைனை நாடிவர அந்தசமையத்தில் பலராமர் தர்பார்நாடி வருகின்றார்
பலராமர் வருகிற கவி
செங்கதிரோன் போலவே முடியும்மின்ன
சேயிழையார்இருபுரமும் சவரிவீச
திங்களைப்போல் நெற்றியில் திருநாமமிட்டு
தீரனும் கொலுக்கூடம் போகவேண்டி
மங்களமாய் அந்தணர்கள் ஆசீர்க்கூர
மாணிக்கயொளிமிகுந்த கடகம் துன்ன
பாங்கான மந்திரி சாத்தகியும் சூழ
பலராமர் கொலுநாடி வருகின்றாரே
தரு
பார்த்த மன்னர்களெல்லாம் நேர்த்தியுடன் பணியும்
பலராமதேவா நந்தார் கொலுவைநாடி (ப)

கார்த்த வீரியன் போலே    கண்டபகைவாகளை
பூர்த்தியாய் உயிர்வதை    கீர்த்தியுடன் செய்வேன்
சு ள்    புண்ணியர் தங்களை    எண்ணத்திலெண்ணுவேன்
கண்ண நண்ணனாய்    வண்ணமாய் வந்தேன்
கரிபரி சேனை எல்லாம்    வரிசையுடனே செல்ல
கண்டமாதர்தியங்கவே    எந்தனையிப்போ    கண்
அருவையர்வந்து தினம்    ஆலாத்தி ஏந்திநிற்க
அந்தன முனிவரெல்லாம்    ஆசீர்மிகவதிக்க
சு ள்    அண்டதேவரும்    தொண்டனென்றிட
கண்டபேர்களும்    தெண்டம் புரிந்திட    ய
நல்ல மொழியுரைக்கும்    பிள்ளையார்க்குப்பம் வாழும்
சொல்லும் வன்யக்குலேசனும்    இராஜகோபாலன்
மெல்லிய பெருந்திருவாள்    நல்லத்திருமணம் பா
வல்லமை புல்வர்ப்பாதம்    வணங்கிடு என்தினம்தே
சு ள்    வஞ்சமில்லாமலே    அஞ்சலி செய்தேன்
கொஞ்சி புகழ்ந்திட    தஞ்சமென்றடைந்தேன்

கவி

மந்திரி சொல்லக்கேளாய மகிழ்ந்துமே நமது தேசம்
சூந்தகமில்லா குடிகள் குணமுடன் க்ஷேமம் தானு
சந்தேகமாகுதப்பா    சடுதியாய் எந்தனுக்கு
சுந்திரமானசேதி    சுருக்குடன் சொல்லுவாயே

பொது வசனம்

இவ்விதமாக பலராமர் கொலுவிருக்க அப்போது துர்யோதனன் பலராமரை பணிந்துக்கொளவது

துரியன் தரு

கண்ணனுக்கு முன்பிறந்தமாமா    துரிய
மன்னவன் நானபணிந்தேன்    பூமா
வண்ணமதாயிப்போ    வந்தேன் உங்களைகாண
சு ள்    வாடியே நானும்    ஆடியே பாமனும்
தேடியே இவ்விடம்    ஓடியே வந்தோம்

பலராமர் தரு

வந்ததே சந்தோஷமாச்சு மருகா    உலகில்
வாழ்குவாய் எந்நாளும்    அருகா
எந்தசேதியைக்கொண்டு    என்னிடத்தில் வந்தாய்
சு ள்    [illegible]த்துமே அதனை    விடுத்திடவேணும்
திடத்தினில் மிகுத்திடும்    தீரனேபுல்லும்

துரியன் தரு

உங்கள் மரியாதையிதுதானு    இந்த

உலகம் சிரிக்கவைத்தீர் சரிதானு
பங்கங்களில்லையோ பலராமதேவரே
கள் தங்கையாள் சுபத்திரை தனையே அந்த
பொங்கமாய் விஜயன் விங்கனம்செய்தான்

பலராமர் தரு

எந்தன்மேல் குற்றங்களில்லையே திருடன்
எம்பிரான் செய்தானும தொல்லையே
பொன்பொருளை நீக்கி போக்கிரியைபலுக்கு
கள் பெருமையாய் கிருஷ்ணனும் திருமணம்செய்தேன்
சிறுமை ள் அதனாலே சிக்கவும் வைத்தான் ஏ

துரியன் கோபித்தல் தரு

இடையனே உன்னிட மடைத்தனங்களை
இப்போதே அறிந்துகொண்டேன் பலராமா உனை
தப்புவேலைகழ் செய்வேன் பலராமா
மாட்டினின் காலையும் ஆட்டினின் காலையும்
மதிகெட்டு பிடிக்கும் மந்தபுத்தியாலே உந்தன்
மங்கையைத்தந்தாய் எதினாலே
இத்தனை மோசங்கள்செய்யவே நீயும்
எத்தனை நாள்காத்திருந்தாய் சொல்லுவாயே நீயும்
சுத்தபுத்தைகளிப்போ விள்ளுவாயே

பலராமர் கவி

சித்து வித்தைகள்கற்ற சீருள்ள சகுனிகேளும்
குததம் நான்செய்தாலே கோபித்து துரியமன்னன்
எத்திசை பழிக்க நீங்கள் ஏனிதம் பேசாதீர்கள்
பத்தியாய் எனது செல்வி பானுமதியைத்தருவேனே

வசனம்

கேளு மன்னு சகுனிராஜனே நான் தவறு செய்ததாக என்மேல் துரியோதனன் கோபிக்கின்றான் எல்லாம் அந்த கிருஷ்ணன் செய்த சூதுமார்க்கமாகும் போனது போகட்டும் என் மகளாகிய பானுமதி என்னும் பெருந்திருவாளைக் கொடுக்க சித்தமாக யிருக்கிறேன் உன் மருகனாகி துரிய ராஜனின் கோபத்தை மாற்றிசமாதானப்படுத்தும் அண்ணு

சகுனி கவி

பிரியமாய் சொல்லவந்த பேர்பெற்ற தேவாகேளும்
அரியனே நீ சொன்ன வார்த்தை ஆனந்தசந்தோஷமாச்சு
உரியவே மகள்தன்னை உத்தமா கொடுப்பீரானு
துரியனும் எண்ணம்போலே திருமணம்செய்குவானே

2

சகுனி கவி

அரவக்கொடியோனே வாரும்மே எண்ணம்
ஆச்சுதே மனம்போலே தேருமே
பருவமுகமுள்ள பானுமதியாள்தன்னை
தருகிறேன் என்றுமே திருமொழிதந்தாரே

சூரியன் தரு

தேருமென்று சொன்ன மாமா உந்தன்
திருமொழியாருண்டோ பூமா
பாருமே அவர்சொன்ன பானுமதியாள்தனை
காருமே மணம்செய்து கடையே செந்தனையே

பலராமர் தரு

மணிமுடி ராஜரே வாருங்கள் இந்த
மாளிகை தன்னிலே அமருங்கள்
துணிவாக எந்தனின் சுந்திர மகளையும்
அணியில் மிகுந்தோரே அருமணம்புரிகுவீர்

சகுனி தரு

அண்டம் பூமி உண்டமாயன் அவர்
அன்னநாய் வந்தீரே நேயன்
எண்ணம்போலே நாங்கள் எல்லோரும் கூடியே
வண்ணமதாகவே வந்து அமர்ந்தோமே

பலராமர் தரு

கோபாலன் தன்னிடம் செல்லுவோம் நீங்கள்
கோரின வார்த்தையை விள்ளுவோம்
தாபமில்லாமலே தன்னுடன் வாருமே
லாபமதையடைய நாமுமே செல்லுவோம்

சகுனி தரு

முன்னே சூதுசெய்த மாயன் இப்போ
பின்னேவாது செய்வான் நேயன்
தன்னிடம செல்லவே தகாது சொன்னேனே
மன்னனே யிதுவார்த்தை அன்னீதமாகுமே

பலராமர் தரு

அப்படி எண்ணுதீர் அண்ணுவே இப்போ
தப்பிதம் நேராது மண்ணுவே
எப்படியாகிலும் எந்தன் மகள்தன்னை
ஒப்பியே மணமது இப்பவே செய்குவேன்

சூரியன் தரு

கிருஷ்ணனிருந்தாலே மோசம் நமக்கு
[illegible]ளம்பியே வந்திடும் நாசம்

திருதராட்டினன் மைந்தன் தீரமாய் சொன்னேனே
தருகாத வழிந்து சாற்றுரீர் இப்படி

பலராமர் தரு.

தெரியாமல் கொடுத்தாலே மன்னு நானா
விரிவாக வருமே சொல்லு
கரியமேனி வாய்ந்த கண்ணனை கேழ்க்கவே
சரியாக நாமுமே தாண்டியே செல்லுவோம்

சகுனி தரு

தலையிருக்கவால் ஆடுமா மழை
இல்லாவிட்டால் தண்ணீர் ஓடுமா
மலையுடனே மண்ணு கட்ட எதிர்த்தாபோல்
நிலையில்லா வார்த்தைகள் நீருமே சொல்லுவீர்

பலராமர் கவி

சந்தேகம் கொள்ளவேண்டாம் சாரங்கன் சாக்ஷியாக
சிந்தையில் மகிக்ஷியாகி சின்னவன் ஸ்ராக்குதனை
தந்திரமாக உரைத்து தாவியே அவனை சேர்த்து
அந்திரர் சாக்ஷியாக அருமணம் செய்குவோமே

பொது வசனம்

இவ்விதமாக பலராமர் சொன்னதுபோல் துரியோதனன் சகுனியும் வீற்றிருக்க அப்பால் பலராமரானவர் சாத்தகியை பார்த்து ஏதன்று சொல்வது

பலராமர் கவி

சாத்தகி சொல்லக்கேளாய் சதிருடன் சேதியொன்று
பார்த்தவர் எவரும்போற்றும் பரபிர்மசுரூபனை
நேர்த்தியாய் எனது தம்பி நீலமேக கிருஷ்ணனை
மூத்தவர் அழைத்ததாக முன்னமே அழைத்து வாராய்

கிருஷ்ணன் வருகிற விருத்தம்

அண்டரெண்ட உலகமெல்லாம் குக்ஷியில் வைத்தேன்
அடியார்கள் உள்ளத்தில் மிகவேயுறேன்
கண்டகன் சோமுகனைக கொல்ல எண்ணி
கடலிலே துள்ளினேன் மச்சமாகி
பண்டுநாள் வேதம்தன்னை பரிதுயானும்
பாலனும் பிர்மனுககு மிகவே தந்தேன்
தொண்டதோர் பாரதம் முடிக்கவந்த தீரன்
கோபாலகிருஷ்ணனிதோ வருகின்றேனே

தரு

மண்ணு விண்ணுமளந்த கண்ணனாக வந்த
மாயகோபாலகிருஷ்ணன்வந்தேன் ஆயர்பாடியில்

வெண்ணை தயிர் பாலைபாலும் உண்டேன்
எண்ணும் காரியங்களை வண்ணமதாய் முடிப்பேன்
துண்ட வீரர்களை கண்டித்துயான் மடிபவேன்
துணிவதுகொண்டேன் சகல துஷ்டரை வென்றேன்
சுள் துதிபெரும் தேவர்கள் இடுக்கதனைத் தீர்த்தேன்
அதிபதி என்றுமே பேரதை எடுத்தேன் (மண்ணு)
சுக்கிரிபனுக்காக திக்கினில் கெடி பெற்ற
உக்கிரவாலியைக்கொன்றேன் சாலோகபதி
சொர்க்கவழியும் தந்தேன்
மக்கிடராவணனை மடிக்க எண்ணம்கொண்டு
மூக்கிய ஆழிதன்னை பக்குவமாய் விந்தேன்
முடிகியே சென்றேன் ராவண மூர்க்கனைகொன்றேன்
சுள் மதித்திட்ட விபூஷணன் மணிமுடிசூட்டினேன்
பதிபுகழ் அயோத்தி நகர்தன்னை நாடினேன் மண்ணு
வஞ்சகம் தனையகற்றும் மஞ்சக்குப்பத்தை சேர்ந்த
வாழும் பிள்ளையார்க்குப்பம் வாசன் சாமிக்கண்ணு
வாங்கினத்தவத்தால் வந்தநேசன்
செஞ்சொல் இராஜகோபாலன் சிறந்தநாடகம் பாட
தஞ்சமா புலவர்பாதம் தாளடி யானுந்தேட
தாண்டவன் பாதம் அனுதினமும் வேண்டினேன்
[நிதம்
சுள் தாசனும் வீரப்பன் சரிதையும் கேழ்க்க
நேசமாய் யெழுதினேன் யாவரும் பார்க்க

கிருஷ்ணன் தரு

அண்ணு சருணா உந்தன்பாதம் எனையாளும் தருணம்
செண்பகம் சாமந்தி சிரந்த மலரைக்கொண்டு
மண்ணையுண்டமாயன் மலரடி போற்றினேன் (அ

பலராமர் தரு

கண்ணுநீ வாழி சுகமாக என்னாளும் நீடூழி
அண்ணன் தென் பாதத்தை திண்ணமாய் பணிந்ததாலே
எண்ணும் கீர்த்திபெற்று இந்தவுலகில்வாழி (கண்ணு

கிருஷ்ணன் கவி

சந்திர வதனம் போன்ற சர்சகுணம் எனது அண்ணு
எந்தனையழைத்த சேதி எடுத்துரை செய்யவேண்டும்
விந்தையதாக யிந்தவேணு கோபாலனரிய
சுந்திரமாகயிப்போ சொல்லுவீர் சொல்லுவீர

பலராமர் கவி

சுந்திர சுபத்திரைதன்னை சூதுகள் செய்துதந்தாய்

வந்துமேதுரிய ராஜன்வாடியே கோபங் கொண்டான்
தந்திர வார்த்தை சொல்லி தருவதாய் மகள்தன்னை
சிந்தையில்கவுடு இல்லாமல் சீர்மணம் செய்வாய்தம்பி

கிருஷ்ணன் தரு துரியனிடம்

சம்பத்தில் மிகுந்த எந்தன்மாமா நீங்கள்
சார்ந்து மனைக்கு வந்தீர் க்ஷேமா
கம்மென்றுவிஜைய ராஜன் கன்னியை திருடிசென்றான்
கண்டால் பங்கமென்று கண்ணனும் மறைந்து நின்றேன்
சுள கன்னி எங்களின் மகள் தன்னையே
வன்னிசாக்ஷியாய் தருகிறோம் முன்னையே சம்

துரியன் தரு

மாமாவே எந்தன் பக்கம் மகிழ்ந்து இருந்திருனல்
மடையர் பஞ்சபசங்களை வெல்லுவேனே

காமனை நீ செய்ததினல் பூமியில் குறவுண்டாச்சு
சுள் பூமியிலுள்ளோர் புகழும் சுந்திரன்
தாமினி சித்துகள் செய்திடும்தந்திரன் மா

கிருஷ்ணன் தரு

சித்திர முடிதரித்த மாமா சத்தியம்
சிதறிநடப்பேனே பூமா
பத்தியாய்தெரியுமே பஞ்சவர் பிறந்தது
எத்திசை பழிக்குமே உத்தமா நானசொன்னல்
சுள் ஏளனம் செய்குவார் தோணவே உலகினில்
மாளவே போரார் மன்னனே அவர்கள் (சித்தி

துரியன் தரு

எந்தவிதம் பிறந்தார்கள் சொல்லும் நீயும்
எந்தனுக்கறிந்திடவே புல்லும்
அந்திர ஜாதியென்று அறிந்து நீர் சொன்னீரே
சுந்தகமில்லாமலே கூடியவீர்யானரிய
சுள் குந்திபெற்றோர் ஐந்தரின் சேதியை
முந்தியே சொல்லுவீர் விந்தையாய் ஓதிடுமே எ

கிருஷ்ணன் கவி

காலனுக்கு பிறந்தவன் தர்மனும் ககடனும் பீமன்தந்தை
மேலினும் வாய்வுமைந்தன் மெத்தவேயானுரைத்தேன்
சீலனும் இந்திரன்செல்வன் சிறந்திடும் விஜைய ராஜன்
ஆலனும்நகுலசகாதேவர் அஸ்வனி தேவர்மைந்தர்தானே

துரியன் கவி

இப்படி ஐவர்சேதி இருக்கவே எந்தனுக்கு
ஒப்பியே மகளைத்தர உங்களுக்கு வருத்தமென்ன

செப்பிடும் பரியமெல்லாம் சீருடன் தாரேன் மாமா
தப்பிதமில்லாமலே சுதனிதனைநீய தருகுவீரே

கிருஷ்ணன் தரு

அன்னநடையுடைய பின்னல் சடையாள்தனை
தருவேனே உமக்குத் தருவேனே
என்ன பரியம்தர மன்னு நினைவு கொண்டாய்
சொல்லுமே தெரிய சொல்லுமே

சூரியன் தரு

கேட்டப்பரியமெல்லாம் வாட்டமில்லாமல் தர
வந்தேனே தேடி வந்தேனே
தாட்டிகமான மாமா கேட்டிடுவாய்பரியமெல்லாம்
தாரேனே இங்கு தாரேனே

கிருஷ்ணன் தரு

பச்சைக்கல் புஷ்பராகம்வைத்திழைத்திட்ட கம்மல்
வேணுமே போட வேணுமே
இச்சையாய் தந்திரானல் உச்சிதமகளைத்தர
இல்லையே தடை இல்லையே

சூரியன் தரு

இதுதானோ ஓர்பொருட்டாய் எந்தனைகேழ்க்க வந்தீர்
மாயனே அருள் நேயனே
மதுருதா தந்தேனிதோ மற்றவை கேளுமையா
மாமாவே எந்தன் நேமாவே

கிருஷ்ணன் தரு

அங்கமயம்போலே ஒரு தங்கஒட்டியாணம் போட
வேண்டுமே போட வேண்டுமே
விங்கனமில்லாமலே வீளம்புவாய் எந்தனுக்கு
சூரியனே ராஜ சூரியனே

சூரியன் தரு

பங்கமில்லாமலந்த தங்கஒட்டியாணந்தன்னை
தந்தேனே மாமா தந்தேனே
சிங்காரமான கிருஷ்ணு பொங்கமாக எண்ணவேண்டும்
சொல்லுமே இன்னம் சொல்லுமே

கிருஷ்ணன் தரு

பத்துலக்ஷஒட்டகபொன் பரியமாக வேண்டுமையா
தாருமே பரியம் தாருமே
சித்தம்கலங்காமலே உத்தமனே தந்தீரானல்
தாரேனே பெண்ணை தாரேனே

துரியன் தரு

எட்டுலக்ஷ ஒட்டகபொன் இன்பமாக தந்தேனையா
மீதி சொல்லேன் மீதியே
தட்டாமல்பந்தலிலே பொட்டென தந்திடுவேன்
மாத்துமே • தாம்பூலம் மாத்துமே

கிருஷ்ணன் வசனம்

அப்படியானால் தாம்பூலம் மாத்தும் துரியோதனமகா ராஜனே

துரியன் வசனம்

ஆனால் மாமா பெண்என்னுது பொன்உன்னுது சரி தானே

கிருஷ்ணன் கவி

எத்திசை மதிக்கும் திராவிய மிச்சபொன்னை
சத்தியம் தவறமாட்டேன் சடிதினில் அனுப்பவேண்டும்
தித்திரை திங்கள் வாரம் சிங்கலத்தில் மூகூர்த்தம்
நத்தியே பெண்ணைக் கூட்டி நாங்களும் வருகுவோமே

பொதுவசனம்

இவ்விதமாக துருயோதனன் தாம்பூலம் மாத்திக் கொண்டு சென்று விட மருபடி பலராமரும் கிருஷணனும் சில வார்த்தையை பேசிக்கொண்டு பிறகு பலராமர் தன்தேவியாகிய ரேவதியை அழைக்க ரேவதி தர்பார் நாடி வருவது

ரேவதி கவி

குங்குமதிலர்தமிட்டு கூர்விழிமையும்தீட்டி
கங்கண கடகம்பூண்டு கன்னியும் எழுந்திருந்
நங்கை என் தாதிமார்கள் நலமுடன்கவரிவீச
சிங்காரவதன ரேவதி சிரப்புடன் வருகின்றேனே

தரு

தங்கபணிதுலங்க தாதிமார் அருகில்சூழ
பொங்கமாக ரேவதியாள் பூவையும்வாறேன்
காரணமாகயின்று கணவனாரழைக்கக் கேட்டு
பூரணமூச்ம் ஜொலிக்க ரேவதிவாரேன்
நெத்தியில் சுட்டிமின்ன உத்தமி இவளென்ன
சுத்தியுய மாதர்கள்சூழ தோகையும் வாறேன்
பாதனர் அழைத்ததொரு பேதமில்லாசேதிகாண
நாத்மதில் தண்டைகொஞ்ச பைங்கொடி வாரேன் த

ரேவதி சரண தரு

சிங்காரமாரா பாதம் வந்தனம் சீர
செங்கை மலருங்கொண்டு நங்கைபணிந்தேன் தொண்டு
மங்களமான மன்னு மங்கையை யழைத்ததென்னு சி

பலராமர் தரு

பரகதமாமயிலே நீயும் வாழ்குவாய் குயிலே
அரநெறி கற்றுணர்ந்த அஞ்சுகமே வாழ்குவாயே
அரசனானழைத்த விதம் அருமையரே சொல்குறேன்
[கேள் (மா)

ரேவதி வேறு தரு

எத்திசை புகழ்ந்திடும் உத்தம நாதனே
சித்திர முடியழகா சொல்லவேணும் அழைத்த
சேதி என்னானந்தனுக்கு விள்ளவேணும்

பலராமர் தரு

கட்டழகிமானே திட்டமாகேளுமே
அட்டியில்லாமலே தந்தேனே மகள்
திட்டமாவாழுயிடம் கண்டேனே

ரேவதி தரு

எந்த அரசர்க்கு தந்தீரோமகள் தன்னை
சுந்திரவதனத்தீரா விள்ளுவீரே இப்போ
அந்தரகரமதை சொல்லுவீரே

பலராமர் தரு

அஸ்த்தினபுரியாளும் அரசன் துரியனும்
அன்பாகவந்துகேட்டதினால் பெண்மயிலே நமது
அருமைமைத்தந்தேனேடி வண்மயிலே

ரேவதி கவி

சிந்தையும் மகிழ்ந்தியானேன் சிருஷ்ணர்தன் நாதா
கந்தமும்புனுகணியும் கன்னிபானுமதியாள்தனை
விந்தையாய் அழைத்துநாமும் வியாரங்கள் அறியவேண்
[டும்

சுந்திரத்தாதியே நீயும் சுதனியை அழைத்துவாருய்

பானுமதி வருகிற கவி

கல்வியும் உணர்ந்தமாதாகமல் நல்கடகம் பூண்டு
நல்லதோர் மலர்முடித்து நலமுள்ள தங்கதபக்கல்
அல்லிக்கொடிபோல் இடையாள் அன்னநடைநடந்து
பல்லொளிமுல்லை என்னபானுமதியாள் வருகின்றளே

பானுமதி தரு

பாலசூரியன்போலே வாலவயதுடையாள்
பானுமதி மாதுவந்தாள் நல்ல
புத்தியில் மிகுந்திடும் உத்தமியான பானுமதி
கலகலகலவென்ன கட்டும்பணிகளாட
கருத்த கூந்தலுடையாள் சிரித்தமுகமுடையாள்
சுகந்தமலரணி விந்தையாய்பூசி

சந்திரன்போலவே சுந்தரிவாராள் பால
கெண்டைவிழியுடையாள் வண்டுகிதழுடையாள்
அண்டமாதர்லணமே என்னை
கண்டுமே அவர்கள் குண்ணவ் போமனமும் அண்டர்
தண்டை வெண்டையமாட தந்தையழைத்தசேதி
செண்டுமூலேபாள கேழ்க்க சீராய் வாராள் ஓதி
சுவி சின்னநடையென மின்னிடையாது
அன்னையின் பக்கல் வந்தனள்கோது பால

பானுமதி தரு

சீரானதந்தையரே சிரந்தநல் பாதத்திர்க்கே
பேரான மலரைக்கொண்டு பெருமையுடன் போற்றி
[செய்தேன்

பலராமர் தரு

எந்தன்குலம் தழைக்கவந்த எழிலான கண்மணியே
இந்தநல்ல உலகில்நீயும் இருந்து மிகவாழ்ந்திடுவாய்

பானுமதி தரு

என்னையீன்ற அன்னையரே உன்னிதபாதமதில்
பின்னமில்லா மலரைகொண்டு பெண்மணியாள் போற்
[றி செய்தேன்

ரேவதி தரு

வாழிவாழி என்மகளே வையகத்தில் எந்நாளும்
தோழியுடன் கூடிவந்த தோகையரே வாழ்ந்திடுவாய்

பானுமதி வேறு தரு

அழைத்தவிதம் ஏதையா எனதந்தையரே
அந்தவிபரம் ஓதையா
தழைத்தசபைதனிலே தையளாள் அறியும்படி
பிழைகளில்லாமலே பிரித்துரைசெய்யவேணடும் அ

பலராமர் தரு

உரைப்பேன் இதனைக்கேளுமே எந்தன்மகளே
உள்ளமகிழ நாளுமே
திரைகடலுலகினில் தேவரறியும்படி
திருமணம்செய்திட பெருமையாய் உனையழைத்தேன் உ

ரேவதி தரு

அரவக்கொடியோனுக்குமே அவர்க்குதர
அன்னமே எண்ணமுங் கொண்டோமே
திரவியம்வனில்சிறந்த திருதராட்டிதன் மகன்
குறையொன்றும் வந்திடாது கோதையேகணம் புரிவாய்

பானுமதி தரு

எனக்கு சம்மதமில்லையே என் தந்தைகாயே
ஏற்றுக்கொண்டதும் சொல்லையே
மனக்கவடம்கொண்டோன் மாப்பிளை எனக்குவேண்டாம்
இணக்கமில்ல தசொல்லை எதையேசொல்லவேண்டாம் எ

பலராமர் தரு

தனத்தில் மிகுந்தவனுச்சே என் கண்மணியே
தள்ளி நீநடக்காதே பேச்சே
கனத்தராஜரீகம் கதிர்முடி பூண்டமன்னன்
கிளைத்து உந்தனைக்கேழ்க்க நிச்சையம்தந்தேனம்மா த

ரேவதி தரு

மொழிசப்பி பேசலாகுமா எந்தன்மகளே
மேதினிதன்னில் யோர்க்குமா
இழிவாகபேசுவாரே இந்த உலகிலுள்ளோர்
பழிபாதகங்கள் வேண்டாம் பாவை மணம்புரியாயே

பானுமதி கவி

அன்னையே சொல்லக்கேளாய் அருமையாள் உறைக்கும்வார்த்தை
மன்னனை மணர்வதர்க்கு மங்கையும் சந்தோஷங்கொண்டேன்
அன்னைஎன் பிர்மதேவன் அமைத்திட்ட விதிபோலாகும்
எண்ணம் போல் நடத்துவீரா ஏவர்களும் அரியத்தானே

கிருஷ்ணன் கவி

அருமைஎன் அண்ணுசேளாய் அறைகுவேன் வார்த்தையொன்று
பெருசோ எனதுதேவி பேதை ருக்மணியாள்தன்னை
உருமையாய் அழைத்துநாமும் உத்தமா சொல்லவேண்டும்
திரமையில் மிகுந்த மாதவிதேவியை அழைத்து வாராய்

ருக்மணி வருகிற கவி

மலைதனைகுடைபிடிக்க மன்னவர் அழைத்தசேதி
தலைமிசைபுகழ்படைத்த தையலும் காதில் கேட்டு
விலையில்லா பணிகள்பூண்டு வேணதோர்பட்டுடுத்தி
நிலையுரிய ருக்மணிமாது நேசமாய் வருகின்றேனே

ருக்மணி தரு

உருக்கும் பொன்னிறம்போலே எரிகும் அழகுடையாள்
ருக்மணிமாது வந்தாள் எந்தன்
உத்தமநாதரை சித்தமாய்காண (ருக்மணி)
திருக்குகற்றதோர் மன்னான் திருமாள் எனையழைக்க
கள் தீதில்லாபல பணிகளும்பூண்டு
ஒதியதாதியர் பணிகுவார்கண்டு உ
மாங்தாமாலை யாரங்கள் மார்நிரையக்குலுங்க
தங்கத்திலுல் ஒட்டியாணம் தாரணி எங்கும்துலங்க
சுள் தாரணியளந்த தர்ப்பரநாதன்

காரணமாக கன்னியாள்போகன்

ருக்மணிசகுண தரு

மன்னவா உன்பாதம் வந்தனம் மங்கையாள் பணிந்துதந்தனம்
பாமலர்சாற்றி மாதுநான் போற்றி
மங்கையை அழைத்தவிதமே மனமரிய ஓதுமே
சங்கரர் மைத்துனரே சகலசூரரை மடித்தவரே
சரணம் சாற்றுவீர் அரிய பூர்த்தியாய் தெரிய
நேற்றியதாகவே பாற்றினேன்பாதமமே

கிருஷ்ணன் தரு

பாதம்பணிந்தபெண்மணி பாரினில்வாழ்வாய் கண்மணி
பாவையேவாழி பகர்ந்தேன் நீடுழி
போதே அழைத்ததைகேளாய் பூவையே புகலுயேன்மேலாய்
ஆதாரமாதேவி அறிவிப்பேன் உந்தனுக்கு
சரணம் அன்னமேத்திரு கன்னியானைசெய்ய
இன்னிலமரிய உன்னையழைத்தேனே ப

ருக்மணி வேறு தரு

திருவென்றால் என்ன அது நாதா அதை
தெரியஉரைத்திடுவீர் வேதா

கிருஷ்ணன் தரு

தெரிய உரைப்பாய் என்றமாதே அது
திருமணமாகுமோடி கோதே

ருக்மணி தரு

திருமணம் யாருக்கு செய்யநாதா என்னை
தேடியே இங்கு அழைத்தீர் போதா

கிருஷ்ணன் தரு

அண்ணன்மகள் பானுமதி பெண்ணே இப்போ
அருமைக்கு கலியாணம் கண்ணே

ருக்மணி தரு

எந்தஊர் மாப்பிள்ளைபோ பின்னு அதை
எனக்கரிய சொல்லுவீரே முன்னு

கிருஷ்ணன் தரு

அஸ்தினுபுரிதுரியமன்னன் பெண்ணே
அவனுக்குக்கொடுப்பது சொன்னேன்

ருக்மணி தரு

கெட்டபதியுடைய ராஜன் நமது
செல்வியைத்தரலாமோ நேசன்

கிருஷ்ணன் தரு

பெண்ணையவனுக்கு நாம்தந்து கெட்ட
எண்ணத்தையடக்கிடுவோம் பிந்து

ருக்மணி கவி

நாதனே உந்தன்சித்து நானிலமறியபோமோ
போதனேமகிழபானேன் பூவையாள் மகளைத்தர
வேதனேஎல்லோருங் கூடிவேகமாய் சென்றிடுவோம்
பாதனே எந்தன்நாதா பரந்தாமா எண்ணம்போலே

பொதுவசனம்

இவ்விதமாக கிருஷ்ணனும் ருக்மணியும் பேசிக்கொண்டிருக்க இப்பால் அஸ்திநாபுரிபட்டிணத்தில் துரியோதனன் சகுனியைப்பார்த்து சொல்வது

துரியன் கவி

தந்திரம் மிகவேகற்ற சற்குணமாமாகேளும்
முந்தியேமாயன்வைத்த முகூர்த்தநாள் நாளையாகும்
பந்தமாய்சென்றுநீங்கள் பரிவுடன் அவர்கள் தன்னை
சிந்தையும் மகிழ்ச்சியாகி சீக்கிரம் அழைத்துவாரீர்

சகுனி தரு துவாரகை வருவது

அதிவிதசேனைகளே வாரும் நாமும்
அழகான துவாரகை நாடிஎல்லோரும்
ரதபதை துருசாகநடந்தி நல்ல
நலமான ஆடை ஆபரணம் உடுத்தி
துவாரகாபுரிதன்னை கண்டோம் இப்போ
துரியராஜன் சொன்ன வார்த்தையுளகொண்டோம்
பலராமர் சீதரனைக்கண்டு நாமும்
பக்ஷமாய் அழைத்தோடி வருகுவோம்யின்று அ

பலராமர் தரு

மாத்திரதேசத்தை கீர்த்தியாய் ஆண்டிடும்
மாபெரியோரே இங்கு வருவீரே உந்தன்
மலரடிபோற்றினேன் அருளுவீரே

சகுனி தரு

பலரடிபோற்றினமாபலராமனே
மண்டலம் தன்னிலே வாழ்ந்திடுவீர் இந்த
மன்னன் ஆசீடவதிததேன் சுகித்திடுவீர்

பலராமர் தரு

நாடியேவந்திட்ட பீடில்லா அரசரே
நல்ல நீர்மோர்தன்னை அருந்துவீரே இங்கு
நன்றாய் வந்தசேதிதன்னை ஓதுவீரே

சகுனி தரு

தாகமது தீர்த்தோம் நாகரீகமாக
தரிவிவந்த விதத்தைகேளுமே நீர்
தந்தமகளைக்கூட்டி செல்லுவோமே

பலராமர் கவி

பேர்பெற்ற சகுனி அண்ணுபுகலுவேன் வார்த்தையொன்று
சீர்பெற்ற செல்வி தன்னை சிரங்கமணக்கோலமாக
கார்பெற்ற அஸ்தினுபுரிக்கு கண்ணனும் அனைவர்கூடி
ஏர்பெற்ற எல்லோர்புகழ்யேகுவோம் யேகுவோமே

சகுனி தரு

பலராமனேவாரும் அஸ்தினுபுரம் இந்த
பாதையைப் பாரும்
நலமாக எல்லோரும் நாடியே செல்லுவோம்
வளமான துவாரகைவிட்டி வைகுந்தாவருவீரே ப

பலராமர் தரு

துவாரகை விட்டு வெகுதூரம்
வந்தோமே தொட்டு
கவத்தகம் கொள்ளாதே கண்ணனே பின்வாரும்
அவமானமில்லாமல் அருமணம்செய்யவே துவா

கிருஷ்ணன் தரு

திருவணம் செய்யவே பானுமதிக்கு
திவிரமாய் செல்லுவோம்
மருவுகதம்பம்சூடும் மங்கைருக்மணியே
பருவமுள்ள மகளே பானுமதியே வாரும் திரு

ரேவதி தரு

மகளே நீவாராய் சந்தோஷமாக
மணமுடிக்கிராய்
அகமகிக்ஷியுடன அன்னமே பின்வாரும்
மகபதிமகியும் மன்னன் துரியன் மனைக்கு மக

ருக்மணி தரு

தங்கமே நீவாராய் வனத்திலுள்ள
விந்தையைபாருய்
பெங்கமாய்பேசா குபுஸ்பரோஜாவும்
விங்கனமில்லாமல் விரித்து மலர்ந்த பூவை தங்

பானுமதி தரு

தாய்தந்தைமாரே உங்களுடன்
தையலாள்வாரேன்
வாய்மதம் பேசாமல் வருகின்றேன் உங்களுடன்
கார்மாம்புமேனி தந்தை கண்ணன் வார்த்தை தள்ளாமல்

சகுனி தரு

தெரியுதுபாராய் அரண்மனை
பரிவாகநேராய்

கரியபேணிவாய்ந்த கண்ணனே அதோபாரும்
சரியாய் நாமும்சென்று சந்தோஷமாயிருப்போம் தெ
பலராமர் தரு
பொன்னகரிதோ இன்னகருக்கு
என்னகரம்ஜோடோ
கண்களும் கூசுதேகாணயிப்பட்டணத்தை
சென்னல் மிகுந்தோங்கி செழிப்பாகததோணுதே பொ
கிருஷ்ணன் தரு
நாம்செய்ததவமோ எனது அண்ணா
நம்செல்விசெய்த தவமோ
சம்பத்தில் மிகுந்தோனை தார்வேந்தன் கிடைத்தானே
செம்மையாய் வனவிநதை சீரதைகண்டேமோ நாம்
ரேவதி தரு
பானுமதியேவாராய் இந்தவனத்தை
பார்த்திநம் சீராய்
காணுவதர்க்கரிதான தோணும் மலரின்விந்தை
நாணங்கொள்ளாதே வேணதும்உன்னதே பா
ருக்மணி தரு
எந்தன் நாதருக்கு மூத்தோர்மகளான
என்தவ செல்வமே
செந்தமிழ் நாத்தமூத்தன் கீதம் மிக பாடி
வந்தோமே அஸ்தினபுரம் வாசவருடன் கூடி எ
பானுமதி தரு
எங்கிலும்காணேன் இன்னகர்போலே
மங்கையும் தோலேன்
தங்குவதர்க்கேற்ற சத்திரம் சாவடிகளும்
இங்குமே அதிகமாய் இருக்குதேவேணது எ
கிருஷ்ணன் கவி
அண்ணாவே சகுனிமன்னா அனைவரும் வந்துசேர்ந்தோம்
முன்னமே துரியனிடம் முக்கியமாகநீயும்
வண்பெரும் பாண்டவரை வரவழைத்து யிங்குநாமும்
துன்பெரும் பங்கமெசெய்ப சொல்லிவிட்டேன்என்பாய்நீபே
வசனம்

ஆனால்கேளும் அண்ணா சகுனி நாம் அனைவரும் அஸ்தினபுரம் வந்து சிங்காரமண்டபத்தில் அமர்ந்தோம் ஆனல் நீ முன்னதாகசென்று சொல்லவேண்டியதென்ன வென்றால் துரியோதனன் கலியாணத்திற்கு அய்வராஜர்களையும் வரவழைத்து அவமானம் செய்ய வேண்டுமென்று அர

யோதனனிடம் யான்தெரிவித்ததாக தெரிவிக்கவேண்டும்
அண்ணை

துரியோதனனைக்கண்டு சொல்வது
சகுனி கவி

அத்திமாநகரையாளும் அரசனே சூரியபூபா
மெத்தவே பலராமர் கிருஷ்ணன் பெல்லியானுமதியாள் மற்ற
உத்தமோர் சேனைகூட உயர்ந்த சிங்கார மண்டபத்தில்
சித்தம்போல் வந்துவிட்டார் சீருடன் அழைத்துவாராய்

துரியன் கவி

அப்படியானலிப்போ ஆனந்த சந்தோஷமானேன்
இப்பவே அரிகிருக்கும் எந்தனின் மந்திரி கேளும்
ஓப்பியே மனைக்குச்சென்று உத்தமபெரியோர்களை
கைப்பிடியாகநீயும் கடுகென அழைத்துவாராய்

வசனம்

ஆனல்கேளும் மாமா அவர்கள் வந்து சேர்ந்தார் என்ற வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில்என்மனம் அதிகசந்தோஷமாயிற்று அடே மந்திரி அவர்களை நாமஎதிர்க்கொண்டு அழைக்கவேண்டும் ஆனபடியால் நீ அந்தப்புரம் சென்று குரு பெரியோர்களாகிய விஷ்மாச்சாரி துரோணச்சாரி கிருபாச்சாரி விதுரராஜன் சல்லியன் கர்னமகாராஜன் என் தாயாகிய காந்தாரி அம்மையும் அழைத்துவாரும் மந்திரிமார்களே

குருபெரியோர்கள் வருகிற கவி

தந்தைக்காக ஆவாசைதனை வெருக்க வீஷ்மருடன்
அந்தமாய் துரோணருடன் அஸ்வத்தாமனுங்கூடி
விந்தைகல் வதனப் அன்ன விதுரமகாராஜனும் நாடி
சுந்திர கிருபாச்சாரி துரியோதனன்மூன் வருகின்றோமே

தரு

குருபெரியோர்களிதோ வந்தார் துரியன் மூன்னே
கிருபாச்சாரியாரும் வந்தனின்றார்
கருணையில் மிகுதியுற்ற கர்னராஜனும் சூழ

சுஎ் திருபுரதகனனை பரிவுடன் மூன்று
தரமதகண்ட சல்லியராஜனும் குரு
பெற்றதந்தைக்காக இப்புவிஆசைவிட்ட
கற்றலவீஷ்மர் சூழவே துரியனிடம்
பத்தியாய் போக நாடவே
உத்தம புத்ராஜன் ஓடியே பின்வருக

சுஎ் ஒளிபெரும் ராஜ மண்டபம்நாடி

தெளிவுடன் நாங்கள் சீக்கிறம் தேடி குரு
செல்வித்தை தகுருவான வல்லத்துரோணரும்கூடி
அல்லலில்லாத பாலனும் அஸ்வத்தாமன்
அவனும் வாரேன் லோலனும்
எல்லையில் அறிவித சொல்லும்பணிதுலங்க
சுள் இளகியமாமதி குலமதில்வந்த
நலமுள்ளராஜனை காணவே நாங்கள் குரு
துரியன் தரு (மைந்தரே வாழி என்ற மெட்டு
குருபெரியோரே திருப்பாதம் தன்னிலே
திரியனும் போற்றிசெய்தேன் அய்யமாரே
கருதியோயாளும் களிப்புடன் உங்களை
காண அழைத்ததேதி பெரியோர்களே
சுள் தோணவே அதனை நானுமே சொல்வேன்
ஆனவம் விடுக்க அய்யரேபுல்வேன் குரு
குருபெரியோர்கள் தரு
மதிகுலம் தன்னில் சதிருடன் வந்த
மன்னனே என்னளும் நீ வாழ்ந்திடுவாய்
துதிபெர எங்களை தொல்சபை தன்னிலே
சுருக்காய் அழைத்ததேதி சொல்லுவாயே
சுள் சுந்தரமாய் இந்தநகரினையாரும்
அந்தகன் மைந்தனே அங்களுக்கோதும் மதி
துரியன் தரு
வதுவைநான் முடிக்க வரவழைத்தேன் உங்களை
வல்லமை மிகுதியுற்ற பெரியோர்களே
சதியது செய்யாமல் நிதியுடன் நீங்கள்
சந்தோஷமாய் நடத்தும் பெரியோர்களே
சுள் சத்தனராஜனின் மைந்தனே தாத்தா
எந்தனை காப்பது உந்தனின் கடனே வது
குருபெரியோர்கள் தரு
பெண்ணெங்கேபார்த்தாய் திண்ணமாய் எங்களுக்கு
பிரியமாய் உரைத்திடுவாய் துரியபூபா
கண்ணனின் தங்கையை காண்டிபன் கெடுத்தானே வேறு
கன்னி எங்கேபார்த்து வத்தாய் சொல்லுவாயே
சுள் கண்தனையிழந்த மன்னனின் பாவா
வண்ணமதாகவே வரைந்திடும் சீலா பெண்
துரியன் கவி
கண்ணனும் மோசம் செய்தானென்று காணவே நாரதர்சொல்ல
வண்ணமாம் பலராமரிடம் வளமுடன் யேகினானும்
திண்ணமாய் செய்தமோசம் தீரனும் கோபமேகொண்டேன்

தண்மையாய் எனைமாற்றி தனவிமை தாரேனென்ருர்

வசனம்

ஆனல்கேளும் .பெரியோர்களே கண்ணனவன் எனக்கு நேமித்திருந்த சுபத்திரையை காண்டபனுக்கு திருட்டுத்தனமாக திருமணம் செய்துவைத்த சேதியை நான் நாரதர் மூலியமாக கேழ்விபட்டு அங்குசென்று பலராமர் மீதில் கோபிக்க உடனே பலராமரானவர் என் சித்தத்தை மாற்றி தன் சுதனியாகிய புானுமதியை திருமணம்செய்து கொடுப்பதாக வாக்குருதிதந்தார் நாளைய சுக்கிரவாரம் முகூர்த்தம் பெரியோர்களே அதோ அவர்களும் வந்து சிங்காமரண்டபத்தில் அமர்ந்திருக்கிருர்கள்

குருபெரியோர்கள் வசனம்

அப்படியா சந்தோஷம் ஆகவேண்டியதை பாரும்துரிமபூபா

துரியன் வசனம்

அடே மந்திரி அந்தபுரம் சென்று என்தாயாராகிய காந்தாரியம்மனை அழைத்து வாரும் மந்திரிமாரே

காந்தாரி வருகிற கவி

அஸ்தினபுரத்தை யாளும் அரசன எனது மைந்தன்
வாஸ்த்துவமாயழைத்த சேதி வஞ்சியர் வந்து ஓத
சாஸ்திரம் மிகுந்து ஓங்கும தார்புகழ் சபையை நாடி
காஸ்த்திரன் தேவியான காந்தாரி வருகின்றேனே

தரு

காசினி கெடிபெற்ற மாசில்லா குணமுற்ற
காந்தாரிமாது வந்தாள் மைந்தனைக்காண — காந்தாரி
நாசினில் அதிவிதி கல்ல மூக்குத்திமின்ன
பூசியே மஞ்சளுடன் புனுகு சவ்வாது துன்ன
சுள் புத்தியில் மிகுந்திடும் உத்தமமைந்தனை
சித்தமாய் காண நத்தியே வாரேன — (காசி)
நூருமைந்தர்கள் தன்னை கோரும் தவமே செய்து
பாரினில் யானுமே யீன்றேன் பக்ஷமுடனே (பாசி)
தேவியே மூத்தபிள்ளை தேடியே என்னையின்று
காரியமாய் யழைத்த காரணமறிவோம் நன்று

சுள் கண்டமாதர்கள் தெண்டம் செய்திட
கொண்டல் மேனியன் பாதமே தொழுதிட (காசி)

துரியன் தரு

அன்னையே சரணம் — உனதுபாதம்
மன்னன் சரணம்

அன்னையே உன்பாதம் புன்னைமலரைக்கொண்டு
உன்னிதமாகவே மன்னவன் தொண்டு (அ)

காந்தாரி தரு

பாலனேவாழி எந்தநாளும்
பாரினில் நீடுழி
சீலனே எனையழைத்த சிரந்தசேதி என்ன
வேலனையொத்தவா விளம்புவாய் முன்னே (பாலனே

துரியன் வேறு தரு

தாயாரே திருமணம் தனையன் நானசெய்யவே
நேயமாய் உனையழைத்தேன் அன்னையாரே பதில்
வாயாலே சொல்லுவாய் முன்னையாரே

காந்தாரி தரு

மைந்தனே மாதினை எங்கனை பார்த்தாய்
எந்தனுக்கோதுவாயே கண்மணியே அந்த
விந்தையான பெண்ணுமெங்கே விண்மணியே

துரியன் தரு

பலராமர் தவச்செல்வி பானுமதியாள் தன்னை
பாலனும் மணம்முடிக்க அன்னையாரே அன்று
பரியமும் மாத்தி வந்தேன் அன்னையாரே

காந்தாரி தரு

அரவக்கொடியோனே அன்புடன் திருமணம்
திரமாக செய்துக்கொள்ளும் எந்தன்பாலா இப்போ
தரமாகயானுரைத்தேன் எந்தன்சீலா

பொது வசனம்

இவ்விதமாக துரியோதனன் சபையில் குருபெரியோர்களும் ராஜாதிபதிகளும் காந்தாரி முதலிய பெண்களும் வந்து நிறைந்திருக்க அந்த சமையத்தில் சகுனியானவன் துரியோதனனைப்பார்த்து ஏதென்று சொல்கிற விதம்

சகுனி தரு

மருகனே சொல்குறேன் கேளுமே அந்த
மாயன் சொன்ன வார்த்தை நாளுமே
பெருமையுமாகுமே பிசகாமல் செய்தாலே
பருவமிதுவேயாகும் பஞ்சபசங்களைவெல்லவே

துரியன் தரு

என்னுவார்த்தை சொன்னால் சொல்லுமே மாயன்
இன்பமாய் எனக்குமே வில்லுமே
சொன்னதைப்போலடவ செய்குறேன்யிப்போதே
மன்னனே மர்மமர்மத்தை சொல்லுவாய்

சகுனி தரு

திருமணம் தன்னையே பார்க்கவே ஐவர்
பரிவுடன் வரவேண்டும் யேர்க்கவே
மருமலர் துளபமாயவன் உரைத்தாரே
செருவமான அய்வர் கீர்த்தியையடக்கவே

துரியன் தரு

சந்தோஷம்கொண்டேனே மாமா ஒரு
சங்கதி சொல்லுவேன் பூமா
விந்தையாய் அரன்மனே வேகமாய் சென்றுமே
சுந்திர தூதனை செப்பியனுப்புமே

பொது வசனம்

இவ்விதமாக சகுனி சொன்னதைபோல் செய்யவேண்டுமென்று துரியோதனனானவன் தன்தூதுவனை வரவழைக்க இதனையறிந்த கிருஷ்ணமூர்த்தியானவர் தூதுதனைப்போல் வேடம் தாங்கி துரியோதனனைக்காணும்படி தர்பார் வருகின்றார்

மாயாதூதன் வருகிற கவி

தட்டிவிட்டு தரிந்து கட்டி தாவியேமீசைமுறிக்கி
அட்டியில்லா துரியன் கொண்ட அகங்காரம்தனையடக்க
திட்டமுடன் சொரூபம்மாற்றி தீரமுடையதூதுதனைப் [போல்
மட்டியில்லா ஆடைபூண்டுமாயவரும்கொலுநாடிவருகின்றாரே

தரு

மண்ணும்விண்ணும்தானதிர கண்ணனும் ரூபம்மாற்றி
திண்ணமாகவந்து மேவினார் தூதனைப்போலே
வண்ணமாக வந்துமேவினார்
சல்லடமும் கச்சைகட்டி தாரணியோர்தான் நடுங்க
வல்லவன் துரியனிடமே அரிகிருஷ்ண தேவர்
நல்லதூதனைப்போல் வாராரே
அரவக்கொடி படைத்த அரசன் துரியன் கொண்ட
கெர்வத்தையடக்க வேண்டி தூதனைப்போலே
அரிகிருஷ்ணன் வந்துமேவினார்
பூண்டவர்க்கு தூதுசென்று பாரதம்முடிக்கவேண்டி
ஆண்டவனும் ரூபம்மாற்றி தூதனைப்போலே
வெண்ணெயுண்டோன் வந்துமேவினார்

மாயாதூதன் தரு

அஸ்த்தினபுரத்தையாளும் மன்னர் மன்னனே ஓமந்தா மன் [னர் மன்னனே

கஸ்த்தியடையாமலே மன்னர்மன்னனே ஓகொ மன்னா
[மன்னனே
களிப்புடன் அழைத்ததென்று மன்னர்மன்னனே
அடியேனும் போற்றிசெய்தேன் மன்னர் மன்னனே
சு ள் காக்ஷியளித்திடும் ஆக்ஷியைபோற்றிடும்
மாக்ஷிமையிருந்திடும் சூக்ஷனே புல்லும் (அ)

சூரியன் தரு

செந்திருபாதம் பணிந்த தூதுவனே ஓகொ தூதுவனே
செகமதில் வாழ்ந்திடுவாய் தூதுவனே ஓகொ தூதுவனே
உந்தனை யழைத்தசேதி தூதுவனே ஓகொ தூதுவனே
ஒளியாமல் உரைத்திடுவேன் தூதுவனே
சு ள் ஓடியே அதனைதேடியே நீயும
வாடிடாமலே நாடிமுடிப்பாய் செந்திரு

மாயாதூதன் தரு

எண்ணுசங்கதியது மன்னர்மன்னனே ஓகொ மன்னர் மன்
[னனே
எந்தனுக்குரைக்க வேண்டும் மன்னர் மன்னனே
பொன்னுமுடியழகா மன்னர் மன்னனே
புத்தியில் நினைத்ததென்று மன்னர் மன்னனே
சு ள் சித்தமா அதனை உத்தமாநீயும்
நத்தியே எனக்குரைத்ததை உய்யும் என்று

சூரியன் தரு

இந்திர பிரஸ்த்தம் சென்று தூதுவனே ஓகொ தூதுவனே
இந்த மணஓலைதன்னை தூதுவனே
எந்தனின் தமயனை தூதுவனே ஓகொ தூதுவனே
யீந்திடுவாய் தர்மரிடம் தூதுவனே
சு ள் எத்தளமுங்கெடி பெற்றிடும் ராஜன்
பெத்தமே சொன்னேன உத்தமபோஜன் (இ)

மாயாதூதன் வசனம்

ஆனால் அரசே அவ்விதமே இந்திரபிரஸ்த்தம் சென்று இந்தமண ஓலையை தர்மராஜனிடம் தந்து வருகிறேன் அரசே

மாயாதூதன் தரு

மாயவரும் தூதனாகி மண்ணுவிண்ணு மரியவே
நேயமுடன் தானெழுந்து நெடியாலும் வாராரே
சுரட்டை மயிர்தான் துலங்க சுருக்குடனே சாடியே
மூரட்டுடன் தடியுங்கொண்டு மூரகரியும் ஓடியே
கண்டபேரை கண்ணுருட்டி கடுகபயமுங்கொள்ளவே

துண்டன் துரியன் சொற்படிக்கே தூதுயூ னும்வுள்ளவே
காடுமேடுவனமுந்தாண்டி கண்டேன் இந்திரபிரஸ்தவே
வீடுதேடி தர்மராஜன் காணநல்ல அதிஷ்டமே

பொது வசனம்

இவ்விதமாக மாயாதூதனை ஸ்ரீகிருஷ்ணமூர்த்திமானவர் துரியோதனன் தந்த மணைஓலையைக்கொண்டு இந்திரபிரஸ்தம் நாடிச்செல்ல அப்போது இந்திரப்பிரஸ்த்தத்தை ஆண்டுவரப்பட்ட தர்மராஜன் தர்பார் வருகின்றார்

தர்மராஜன் வருகிற கவி

ஆதியாம் பரமமூர்த்தி அணிந்திடும்மதிதழலில்
நீதியாய வந்துதித்த நிலைமிசைக் கீர்த்திபெற்ற
சூதில்லா குணமும் வாய்ந்த தம்பிமார்கள்சூழ
தாதிமார்கள் சவரிவீச தர்மராஜன் வருகின்றேனே

தரு

தர்மம்தனில்மிகுந்த பொருமை குணமுடைய
தர்மராஜனிதோ வந்தேன் கொலுமண்டபம் நாடி தர்ம
கார்முகில் வண்ணன்பாதம் கருத்தில் மிகதுதித்து
பேர்புகழ் காவலர்கள் பிரியமாய் கொடிபிடித்து
சுள் பின்னுமுன்னுமே கன்னியர்கூடி
உன்னிதசாமரை வீசவேபாடி தர்மம்
குந்தமாதேவியர்க்கு முந்தியே மைந்தனாக
வந்து பிறந்த தர்மனும் உலகம்காண வந்து
எனதனின் தம்பிமார்கள் இருபககம் சூழ்ந்து நிற்க
யோகப்பூச்சக்கிறகுடை இன்பமாகப்பிடிக்க
சுள் இசையுடன் மத்தள சத்தமும் போட
வசையுடன் பாவலர் வந்துமேபாட தர்மம்
பத்தரைமாத்துத் தங்கம் பனும்பொன்னால்செய்திட்ட
பதக்கம் பளபளென்னவே ஒளிமிகுந்த பதக்கம்
சக்திசிவன் பாதத்தை பக்தியாய் மனதில் எண்ணி
சதிகார துரியன் செய்ப சஞ்சலம் நினைத்துருண்ணி
சுள் சர்ப்பககண்ணினிள் நற்பதம்போற்றி
சீசா பெரும் கீர்த்தி இப்புவிதனிலேற்ற
அண்டபுவன முண்ட ஆதிமாயன் பாதம்போற்றி
எண்டிசை துதிக்கும்மாயா இடரதை தீர்ப்பாய்போற்றி
கொண்டல் மேனிகண்ணா உந்தன் குறைகடல்பாதம்போற்றி

டையார் கவி

பார்த்திபா சொல்லக்கேளாய் பகருவேன்சேதிஒன்று
நேர்த்தியாய் மனைக்குச்சென்று நின்தனின் தமயனை

பூர்த்தியாய் பீமசேனனை புகழுடன் அழைத்துக்கொண்டு
கார்த்திரமுடனேயிங்கு களிப்புடன் வருகுவாயே

வீமன் வருகிற கவி

கிரிமதுபோல் மகுடமது சிரசில் மின்ன
கிளம்பியே கர்ச்சித்து கெதைதனை யேந்தி
கரியதனின் பலம்படைத்த மதனதீரன்
கார்க்கோடன் வாசுகியும் நடுநடுங்க
பரிவாக பலபணிகள் அலங்கரித்து
பக்ஷமதாய் தமயனிருபாதம்காண
வீரிடவே தண்டையது காலில் கொஞ்ச
வீமசேன ராஜனிதோ வருகின்றானே

வீமன் தரு

வந்தானே மதவீமசேனன் நல்ல
வாகுவல்லயமுடன் பணிகளும் மின்ன
சந்திரகுலத்தில்வந்த தீரன் எதிர்த்த
சத்ராதிதங்களை வதைத்திடும் சூரன்
ஊரகே பூரக கடகமாட அந்த
அந்ராதிதேவர்களும் கண்டுபயந்தோட
கார்வண்ணன் பாதமதைகோரி இப்போ
காணவே வாரேனே அண்ணனை மீறி
சிங்கத்தைப் போலவே கர்ச்சித்து யானும்
சீரானகண்ணனை மனதினில் அர்ச்சித்து
பொங்கமான சேதியது தன்னை இப்போ
புகழுடன் காணவே வாரேனே முன்னே (வ)

வீமன் தரு

பூமாதேவியையொத்த அண்ணா உன்பாதம்
போற்றினேன் வீமசேனனென் முன்னா
தாமதமில்லாமலே சாற்றுவீர் அழைத்தசேதி
சு ள் தாரணி தன்னிலே பெருமையில் மிகுந்த
பாரமணிந்திடும் பூமனே சொல்லும் (பூமா)

தர்மர் தரு

மத்தகபலம் படைத்த தம்பி உலகில்
மகிக்ஷியாய் வாழ்ந்திடுவாய் நம்பி
சித்தமாய் அழைத்தசேதி தெரிவிப்பேன் உந்தனுக்கு
சு ள் சிந்தை மகிழ்ந்துமே முந்தியே கேளும்
விந்தையதாகவே விள்ளுவேன் நானும் (ம)

வீமன் தரு

என்ன சங்கதியது அண்ணா அதனை

இன்னதென்றுரைத்திடுவீர் நன்று
அன்னியமான வார்த்தை சொன்னீர் பாஞ்சாலிய
ள் அன்புடன் அதனை இன்பமாய் உரைத்தால்
துன்பமேசெய்து அண்ணனே வாரேன்

தர்மர் தரு

அப்படியொன்றுமில்லை தம்பி நமது
அன்பர் வாராததாலே வெம்பி
இப்பவே எல்லோரும் இருநாம் தன்னைகூப்பி
ள் இன்பமாய் தோத்திரம் மன்னவர் செய்தாலே
புண்ணியரை காக்கும் கண்ணனும் வருவார்

வீமன் கவி

அண்ணாவே நீருரைத்த அருள்படி நாங்களிப்போ
ண்ணனைத்தோத்தரிக்க கருத்தினில் எண்ணங்கொண்டோம்
மண்ணைத்தான் உண்டமாயா மணிவண்ணா இந்தவேளை
ண்ணம் எங்கள் மீதில்வைத்து இரையவாகார்த்திடாயோ

பொது வசனம்

இவ்விதமாக பஞ்சவர்கள் மாயவனை தியானம் செய்ய
அந்த சமையத்தில் மாயா தூதுவன் மணஓலையை தருமரிடம்
தருவது

மாயா தூதுவன் கவி

மன்னாதி மன்னரைவிட மனதயாளமுள்ள வேந்தே
வண்பெரும் அஸ்தினாபுரம் வகையுடன் ஆளும்மன்னன்
உன்னித நிருபம் தன்னை உங்களிடம் தருகச்சொன்னார்
சின்னவன் தந்ததினை சீக்கிரம் வாங்கி பார்ப்பீர்

வீமன் தரு

ஆரடா தூதனே வாரும் துரியன்
அனுப்பிய நிருபத்தின் பேரும்
கூரடா அதனையும் தலையமரியவே
தேரடா நீ வந்தவிதத்தையும் பிரியவே

மாயா தூதன் தரு

பலம்பெற்ற பீமரே கேளுமே யானும்
பரிவாகசொல்லுரேன் நானுமே
நலமுடனே அந்த ராஜன் துரியனுக்கு
உலகெல்லாமரியவே உத்தமண ஓலை

வீமன் தரு

பண்ணெங்கே பார்த்தானே சொல்லடா துரியன்
ரியவே எனக்குமே விள்ளடா

மாயாதூதன் தரு

செபத்திரைமாரிடே போனதால் அந்த்
சுந்திர கிருஷ்ணனும் வேரதாய்
அபமானம் வருமென்று அவரண்ணன் மகள்தன்னை
அருமரியாமல் பரியமும் மாத்தினார்

வீமன் தரு

மாத்தினரோ கிருஷ்ணன் பரியமும் அந்த
மணிவண்ணன் செய்ததை அரியனும்
ஆததிரமாகவே அரிகிருஷ்ணன் அவனோடு
பூர்த்தியாக சேர்ந்து பெண்தனை கொடுத்தாரே

மாயாதூதன் தரு

உங்களைவெருத்துமே பேசினார் நீங்கள்
ஊதாரி என்றுமே யேசினர்
பங்கமழிந்திட விங்கனமாகவே
செங்காழிகையனும் செப்பீரைவ்விடம்

வீமன் தரு

எங்களைவெருத்துமே பேசினன் அந்த
இடையனை பார்க்குமோ யேசினன்
சங்கையில்லாமலே தந்தையின் தங்கையை
விங்கனமிக செய்த வேணுகோபாலனுச்சே

மாயாதூதன் தரு

காலனுக்கு தர்மராஜனும அந்த
காற்றுக்குமேவீம சேனனும்
ஞாலமில்லாயிந்திரன் தனஞ்செயன் தந்தையாம்
கோலமா அஸ்வனி குழந்தைகள் மற்றவர்

வீமன் கந்தார்த்தம்

அந்தமுடன் வசுதேவர்க்கு சுதனாய் ஜெனித்து
ஆடுமாடுகள் மேய்க்கும் நந்தன் வீட்டில்
சொந்தமுடன் வளர்ந்து வந்த சோம்பேரிப்பயல்
சொல்லவும் யோமோ எங்களை இழியானென்று
இந்தநேர் சமயமே அங்கு சென்று
இருக்கின்ற கிருஷ்ணனுடன் மற்றவர் தன்னை
சிந்து சிந்தாகவேயானும்

தரு

செதரபதர அடிப்பேனே ஒரு நொடியில் செதர
செதரிப்பதரிஓட உரமும் திரமும வாட
கதரிப் பறட்கவெல்லாம் காலன் பதியேத்தேட
கள் தண்டவர் யாவரும் தெண்டமும் செய்திட
தண்டன் துரியனை கொன்றுமேவாறேன் செ

எண்ணின சுபத்திரையை என்தம்பி மணந்தானே
மண்ணினிலே வேறே பெண்ணைக் கேட்டார்த்தான்

பொது வசனம்

இவ்விதமாக வீமனானவன் தூதுவன் சொன்ன வார்த்தைகளை கேட்டு அதிக கோபங் கொண்டு அஸ்திரபுரம் கிளம்ப இதனையறிந்த தூதனாகிய கிருஷ்ண மூர்த்தியானவர் சுயரூபத்தோடு வீமனின் கோபத்தை மாற்றுவது

கிருஷ்ணன் தரு

மைத்துன பொறும் பொறும் கில்லு இதோ
மாயவன் வந்தேனே சொல்லு
உத்தமா உங்களின் உருதியை அரியவே
இத்தருணம்யானும் இயம்பினேன் அவ்வாறு

வீமன் தரு வேறு

அரிமாலே சருணம் உமதுபாதம்
திருமாலே தருணம்
அரிமாலே உன்பாதம் அடியவன் பணிந்தேனே
தெரியாமல் யான்செய்த சிறுபிழைதனை பொருப்பீர் அ

தர்மர் தரு

கண்ணனே சருணம் காளியுடை
அண்ணனே சருணம்
எண்நாளும் உன்பாதம் யிருதயம் தனில்வைத்து
மன்னவர் அய்வரும் மாயவா பணிந்தோமே

கிருஷ்ணன் தரு

தர்மனேவாழி பீமனுடன்
தனஞ்செயா நீடுழி
வர்மமனமில்லாதவா நுள்ளநகுலனே
சர்வலோகம் புகழும் சகாதேவனுடனே தர்ம

வீமன் தரு வேறு

தூதனாய் வந்தவிதம் மாமா அதை
சொல்லுவீர் எந்தனுக்கு பூமா

கிருஷ்ணன் தரு

மைத்துன வந்தவிதம் தானே இம்போ
மகிழ்ந்துரைத்திடுவேன் நானே

வீமன் தரு

சொல்லுவீர் அந்தசேதி அரிய நீரும்
சுருக்கினில் எங்களுக்கு பிரிய

கிருஷ்ணன் தரு

தரீமனுக்காகயின்று நானும் மாமா

தூதனய் இங்கு வந்தேன் தானும்

தர்மர் கவி

துரியனும் உம்மையிங்கு தூதனய் அனுப்பிடவே
கரியமால் தனக்கிசைந்து கருத்துடன வந்த தென்ன
பிரியவே அதன் விபரம் பெருமாளே நீங்களுமே
அரியவே எங்களுக்கு அரைந்தருள்புரிகுவீரே

வசனம்

ஆனல் சேளும் பகவானே துரியன் தங்களை எதர்க்கா தூதனுக எங்களிடம் அனுப்பினவைததான் தாங்கள் அதர்க்( சம்மதம்பட்டு இவவிடம் தூதனுக வந்த காரணம் என்( அதனை தெரிவிக்க வேண்டும் கிருஷ்ணபகவானே

கிருஷ்ணன் வசனம்

ஆனல் கேளும் தர்ம நந்தன பார்த்தனுக்கு என் த கையாகிய சுபத்திரையை துரியனுக்கரியாமல் திருமண செயதுவிட்டதை அரிந்த துரியோதனனவன் எங்கள்பேரி கோபித்துககொள்ள நாங்கள் அவனை சமாதானப்படுத் என் தமயனர் குமாரத்தியாகிய பானுமதியை தருவதாகபரி மாத்தி முகூர்த்தம் நேமித்து யாவரும் அஸ்த்தினபுரி பட் ணம் வந்துசேர்ந்து விட்டோம் நான் உங்களை அங்கு கா( தினல் துரியனுக்கு கபடமான வார்த்தைகளைச் சொல்( அவனுக்குத் தூதனுக வந்தேன் நீங்கள் எல்லோரும் அங்( வந்து சேருங்கள் அவ்விடத்தில் நான் உங்களைக் கண்டா மதிக்காமல் இழிவாக பேசுவேன் அதர்க்கு நீங்கள் மவு( மாக இருக்கவேண்டும் பின்னல் நடக்கவேண்டிய விசைய களை அங்குதெரிவிக்கின்றேன் நான் முன்னதாக அவ்விட( செல்கிறேன் நீங்கள் தாமதமில்லாமல் சீக்கிறம் சேருங்க( மைத்துனர்மார்களே

தர்மர் கவி

மாயவர் சொல்லிச்சென்ற மகிழ்பெரும் எண்ணம்போல்
நேயமாய் செல்ல வேண்டும் நேரினே மையார்களும் நாமும்
காயாம் புவண்ணன்பாதம் கருத்தில் எண்ணியிப்போ
தாயாதியின் நாரம்நாடி சடுதியில் யேகுவோமே

தருமர் தரு

பஞ்சவரிதோ நடந்தார் அஸ்த்தினபுரம் பஞ்ச
பஞ்சவரிதோ நடந்தார் அஞ்சலஞ்சலாக சே(
மிஞ்சியேவுந்திட மேளசத்தம் முழங்க
கள் பேட்டிமையாகவே காட்டினை தாண்டியே
தாட்டிகமானதோர் தம்பியை வேண்டியே ப
பஞ்சவுதாரமான அச்சுதன் தானுரைத்த

மார்க்கமதனை பார்க்கவே வேடிக்கையாக
மார்க்கமதனை பார்க்கவே
அச்சமில்லாமலிதோ அஸ்த்தினாபுரம் வந்தோம்
சுள் ஆசையாய் குருக்களை நேசமாய் பணிவோம்
வாசவன் மொழிபோல் பாசமாய் இருப்போம்ப

துரியன் தரு

எந்தனுக்கு மூத்தோரான அண்ணா உந்தன்
இருபாதம் நான்பணிந்தேன் மன்னா
விந்தையாய் எந்தனுக்கு சுந்திரர் திருமணத்தை
குந்தகம் வாராமலே கூடி இருந் நடத்தும் எ

தர்மர் தரு

தம்பியே எந்தநாளும் வாழ் வாழ் உலகில்
தாராளமாகப்புவிதனை ஆள்வாய்
நம்பியே திருமணத்தை நாங்களும் கண்ணால்காண
செம்மையா இருந்ததாலே சீக்கிறம் வந்தோமப்பா

சகுனி கவி

அரவமேகொடிபடைதத அஸ்தினாபுரத்தையாளும்
திரமைசேர் துரியபூபா திரண்டுமே சேனையெல்லாம்
கரமான ஐவர்களும் களிப்புடன் வந்துசேர்ந்தார்
குரவது வந்திடாது கோரினமணம்செய்வோமே

திருமணத தரு

மணமது செய்தாரே துரியனுக்கு மணமது
மணமது செயதாரே யாவெரியோருங்கூடி
மங்கை பானுமதி மன்னன்துரியனுக்கும் மணமது
சட்டமாய் திருவிளக்கு திட்டமாய் யேற்றினார்
செட்டாய் சாலுங்கரகம்பிட்டு அரசாணியுடன் மண
அஷ்டதிசையோரரிய அம்மியும் வலமாக
இஷ்டமாய் பலதானியம் எதிரில்மிகவேவைத்தார் ம
வேதவேதியர்களும் வேதங்களோதினார்
பாதுபானுமதிக்கு மாங்கல்யம் சூட்டினார் மண

துரியன் கவி

ராமாவே சொல்வேன் கேளாய் மகிழ்ச்சியாய் சேதியொன்று
நமமாய் பஞ்சவரை திருத்தியே ஓர்பக்கமும்
சாமன்ன் குலத்திலவந்த சுந்திரசேனைகட்கும்
ஈமமொன்றில்லாம் தான்பரிமாருவிரையா

கிருஷ்ணன் கவி பீமனிடம்

மதகரிபீமசேனா மர்மத்தை ஒன்றுசொல்வேன்
பதமாக பந்தலில் பரிமாரும் வேளைதன்னில்
சாதகம் மனதில்வைத்து கல்யாணத்தில் வந்தோர்கன்னை

சாதமும் பத்தாதென்று சாட்டியே வாட்டிடாயே
பின்னமில்லா துவரம்பருப்பது போட்டு
பிரியமா பசுவின் நெய்யது விட்டு
உருமையாய் ஜிலேபி ஆமைவடை லட்டு
உரளப்பொருயலுடன் அதிரசம் சுட்டு
ஒழுங்காக வாழைக்காய் வருத்துமேயிட்டு
ஒருமையுடன் அப்பளம் பாயாசம் விட்டு
வாருங்கள் சேருங்கள் உட்காருங்கள் பசியாருங்கள்

பீமன் கந்தார்த்தம்

திருமணமென்று சொல்லி திரமையாய் எங்களைதான்
வரும்படியாகச் செய்துவஞ்சகம் மணதில் எண்ணி
குரவது செய்த அந்த கொர்டிம்பாவி துரியன்சேனை
திரமது மனதில்கொண்டு

தரு

தெரித்தி தெரித்தியடிப்பேன் துரியன் சேனையை
பிரித்து பிரித்து விடுத்தேன்
கருத்த மேனியுடைய கண்ணன் வந்தபோதிலும்
பெருத்த கெதையினாலே பின்னப்படவே செய்வேன்
சுள் பிரியமாய் எலிசாதம் சரியுடன் ஒன்றுசேர்த்து
நெரியுடன் யானுமே வாரி வாரிபொசித்தேனே
வாடவே யானும் சாடவே
தேடவே சேனை ஓடவே
தேசத்தரசரெல்லாம் மோசம் மோசமென்று ஓட
நேசமான சகுனி நின்றுமனதுவாட

சகுனி புலம்பல் தரு

அஸ்த்தினபுரத்தை ஆளும்தீரனே ஓ துரியபூபா
அவதிகள வந்து நேர்ந்தவதய்யய்யோ ஓ துரியபூபா
பந்திபரிமாரும்போது ஓதுரியபூபா
புலாட்டினன் செய்தசூதை சொல்லவோ ஓ துரியபூபா
சாதம் பத்தவில்லை என்றுமே ஓ துரியபூபா
சாட்டியடித்து வாட்டினனே ஓ துரியபூபா
வந்த மன்னர்கள் சாப்பிடாமலே ஓ துரியபூபா

துரியன் கந்தார்த்தம்

அப்படியா செயதான்பீமன் அரிகிறேன் நொடியிலிப்போ
எபப்டி தெகிரியம்கொண்டான் என்னையும் அரிந்திடாமல்
தப்பிதம்மிகவே செய்த தடியனே பீமா நில்லு
செப்பியே எழலாபதிக்குன்னை

தரு

சொக்குறேன் நொடிதனிலிப்போ அடடாபீமா

பார்க்குறேன் திரத்தை தப்போ
யேர்க்கன செய்களுதை எண்ணி பார்த்திடாமலே
போக்கிரித்தனமாகத்தாக்க எண்ணமுங் கொண்டாய்
சுள் போக்கவுமுரைப்போ ஊக்கமுடனே நானும்
தாக்கியனேக பாணம் நாக்கையருப்பேன் தானும்
ஜாடாதே எட்டி ஓடாதே
ஆடாதே சும்மா பாடாதே
அந்திர தேவரெல்லாம் விந்தையாக வந்துமே
உந்தனுக்குதுணையாக எந்தனை எதிர்த்தாலுமே

பீமன் தரு

சூரியனே சண்டைக்கு பிரியமாய் வந்தாய் பார்க்குறேன்
அரிய உன்சேனையை அதமசெய்து எமன்பதிசேர்க்கு
[றேன்
ள் அந்தநாளினிளங்களை நொந்துவாடிட செய்தாய்
இந்த சபையில் சாதம் தந்திடாமலே உய்தாய்
இப்படி சதிமோசங்கள் ஒப்பியே செய்தாயே
தப்பிலிமையலே எப்படி சமர்க்கு வந்தாய்

சூரியன் தரு

ஈனமானமில்லா பீமனே உந்தனை வாட்டுறேன்
இத்ததியானமே மமத்தவே காலனூர் ஓட்டுறேன்
ள் இருகரம் தன்னாலே சரம்மாரிவிடுத்தேனே
திருமூர்த்திகள் வந்து திகைத்திடதொடுத்தேனே
தீரவீரனே உன்னை டாராய் கிழிக்குறேன் பார்
பாருக்குள் துணைவந்த சூரரை ஒழிக்குறேன் நேர்

பீமன் தரு

மாந்தைக்குள்ளிருந்து முந்தியே பிரந்தாய நில்லடா
மட்டைக்கோழிபொரிப்பதைப்போல் வந்தாய் சொல்லடா
ள் மோதியே அனேக பாணம் மீதில்விடுத்தேனிதோ
ஆட்டியே எமனுலகம் தாட்டிகமாய் ஓடிடு

சூரியன் தரு

எந்தனை யுளிதமாகவே சொன்னாய் பையனே
உந்தனின் வலுவை எந்தனறிவாய் கையாலே
ள் குந்தமாதேவியர்க்கு ஐந்து புருஷனென்று
இந்த உலகிலுள்ளோர் நிந்தனை என்பார்களே
கோடி கோடியாய் பாணம் நாடியே விடுத்தேனே
தேடியிருப்பிடமும் ஓடிடுவாய் சீச்சீ

பீமன் தரு

ண்டியிட்டு கோபங்கொண்டேன் உன்னைக்கொல்ல
ண்டமதைக்கையிலேடுத்தேன்

சு ள் எண்டிசை தேவர் ளும் வந்து தடுத்திட்டாலும்
கொண்டசமர்த்தினாலே உந்தனை வாட்டிடுவேன்

துரியன் தரு

வில்லெடுத்து வந்து நுதித்தேன் காலனைப்போலே
சொல்லாமல் ஓட்விடுத்தேன்

சு ள் எல்லையிலுள்ளவர்கள் மல்லுவேண்டாமென்றாலும்
அல்லல் படுத்தி உன்னை கொல்லாமல் விடுவேனோ

பீமன் தரு

கெதாயுதமதை எடுத்தேன் சிவனைப் போலே
சதமாகமோதியடித்தேன்

சு ள் பாதகா உனக்காக பரந்தாமன் வந்தாலுமே
வேதனை மிகவேசெய்து வெல்லுவேன் அவரையும்

துரியன் தரு

அஸ்த்த சந்திரபாணமெடுத்தேன் கோபமிகுத்து
கஸ்த்தியடையவே விடுத்தேன்

சு ள் சாஸ்திரம் மிகபேசி சமர்த்ததையுங் காட்டவந்தாய்
நாஸ்த்திசெய்யவே உன்னைநானும் வெகுண்டுவந்தே
[ன்

பீமன் கந்தார்த்தம்

அடிக்கவே வெகுண்டுவந்த அருவுக்கெட்ட துரியா உன்னை
பிடித்துமே கைகளாலே பின்னாங்கட்டாகக்கட்டி
படிதனில் எவரும்பார்த்து பங்கமே செய்யயிப்போ
துடிதுடித்து நீயும் வாட

தரு

தூக்கிபிடித்தேன் பாரடா பூமியின் கண்ணில்
தாக்கியடித்தேன் நேரடா
காக்கை கத்திக்கொண்டு கதரிவிழுவதைப்போல்
நாக்கையருத்துயிப்போ நமன்பதிசேர்க்குறேன் பார்

சு ள நஞ்சுண்ட சிவனுமே அஞ்சுவாரிந்தவேளை
கொஞ்சவையலே உன்னை மிஞ்சியடித்தேனிதோ

துரியன் தரு புலம்பல்

என்னநான் செய்வேனையா மாயவரே மாமா
என்னைமிக இம்சித்தானே மாயவரே
படுபாவி வீமனவன மாயவரே என்னை
பங்கமிக செய்தானையோ மாயவரே
சகுனிமாமாவுக்காக மாயவரே நானும்
சமர் செய்யபோனேனையோ மாயவரே
சாதம்கரிப்பதாமையால் மாலவரே என்னை
சாட்மிக வடித்தான் மாயவனே

கிருஷ்ணன் கவி

மருகனே அஞ்சவேண்டாம மாபெரும் வீமன்தனனை
ஒருமணி நேரத்தினில் உயிர்வதை செய்து உந்தன்
கருத்துமே சந்தோஷிக்க காருத்தன் செய்யாவிட்டால்
திருமாது மார்பனல்ல சீக்கிறம் சென்று வாறேன்

கிருஷ்ணன் சண்டை தரு

மதிகெட்ட பீமனே மருகன் மேல்சண்டைக்கு வந்தாயோ
கதிபெற நீயுமே காலன்பதிக்கு சேர வந்தாயோ
கற்றவித்தைகள் என்னிடம் காட்டியே நின்றாயோ
கசடனே கரம் வீசியே இங்கு தரந்தாயோ
சு ள் காட்டாதே உன்னிட சத்துகள் தன்னை
காலன்பதிசேர்க்க வந்தேனே முன்னை
தாட்டிகமாகவே துள்ளாதே என்னை
தானே ஜெயித்திட முடியாது சொன்னேன்
தஞ்சமென்று என்று என்னை அஞ்செலி செய்தாலுமே
பஞ்சாய்யடிககாமல் மிஞ்சவிடுவதுண்டோ

பீமன் சண்டை தரு

கீாயனே சண்டைக்கு நேயமாய்வாக் கண்டேனே
மடியவே உனக்குநெடுங்காலம் வந்ததோ துண்டனே
ஆயர்கள் வீட்டில் அள்ளி வெண்ணையுண்ட தண்டனே
அன்பாய் தென் திசை தன்னிலேயேற்ற விண்டனே
சு ள் ஆரபாரமாக சரமது வருகுது
கோரங்கள் அதிகமாகவே பெருகுது
தீரபேசியே உன்மனம் உருகுது
வாரணம் கார்த்தமுகமது கருகுது
வல்லவனே உன்னை எல்லோருமறியவே
கொல்லாமல் விடுவேனோ மல்லுசெய்ய வந்தாய்

கிருஷ்ணன் தரு

அண்டத்த மரர்களும் கண்டு நடுங்கிட கொல்லுவேன்
துண்டனே உன்னுடைய கதை தைரட்ட தள்ளுவேன்
சண்டனும் உயிரை கொண்டுபோகவே சொல்லுவேன்
அண்டன் தூரியனுக்கு உந்தனை கொண்டு புல்லுவேன்
சு ள் தீரனே அனேக சரமது வருகுது
வீரனே உன்னிட தீரமும் குறைகுது
வீரனே அனேக பாணமும் பெருகுது
கோரனே உந்தனின் மனமது உருகுது

காண்டேன் அனேகபாணம் எண்டிசை நடுநடுங்க
ண்டமிருதப்மென்று கண்டோர் பயமுகொள்ள

பீமன் தரு

விட்டபாணத்தை தட்டிவிலக்கியே மீரினேன்
வெகுண்டுவேண சரமதைவிட தேரினேன்
திடீடென சரத்கால் உன்னுடலையும் பூரினேன்
தீரர்கண்டுபயமது கொள்ள வாரினேன்
சுள் சிந்தாக்கினிப்போலே பாணமும் விட்டேன்
சந்திராயுத அஸ்த்திரம் தொட்டேன்
உந்தனின் பாணத்தையானுமே சட்டேன்
இந்த சமையம் தன்னில் எந்தனை வென்றிடவு
உந்தனலாகாது முந்தியே ஓடிடு

கிருஷ்ணன் கந்தார்த்தம்

அடிக்கடி வீரம் கூறும அரிவுகெட்டவனே கேளா
படிதனில் எவருங் காணபழுவெலும்பு பதைபொடிது
துடியுடன் உனைக்கொன்று துரியோதனன் மனங்களிக்
கடிகியே பாணங்களிப்பே

தரு

காட்டியே விடுத்தேன் மனம்பதைக்க
பூட்டியே தொடுத்தேன்
வாட்டமிகவே கொண்டு வாடிதவித்திடவே
ஆட்டியே பம்பரம்போலே அந்தகன் பதிசேர்கக
சுள் அண்டரும் முனிவரும் கண்டுமே வாடிட
தெண்டுதோமரம் கொணடுமே ஜாடிட

பீமன் கந்தார்த்தம்

கதிரவனை பனிக்கூட்டம் வெல்வதுண்டோ
கங்கை தன்னை செந்தணல் ஜெயிப்பதுண்டோ
துதிபெரும் மலையை வெல்வதர்க்கு
துய்ய மண்ணாங்கட்டியாலாகுமோ
சதிருடன் சிரிதன்னை யெதிர்ப்பதர்க்கு
சர்ப்பத்தால் ஆகுமோ யேனெ இந்த
மதிகுலபீமனை செயிப்பதர்க்கு

தரு

மாயவா உன்னலாகுமோ எனைஜெயிக்க
காயாபு வண்ணலாகுமோ
தயாளமான வார்த்தை தான் சொன்னல்முடியா
ஆயர்குல மாதராலே அடிபட்டு திகைத்தாயே
சுள் அந்தகன் உன்னைகொண்டுமே போக
சுந்திரா எதிரே வந்துமே நிர்க்குறான்

கிருஷ்ணன் தரு

அந்தகன் எதிரே வந்தானென்குராய் ஓ பீமசேனு

உந்தனைக் கொண்டுபோகவேதான் ஓ பீமசேனா
பீமன் தரு
எந்தனை ஜெயிக்கஉந்தனலாகுமா கோபாலகிருஷ்ணா
சிந்து சிந்தாக்குவேன் பாராய் கோலாகிருஷ்ணா
கிருஷ்ணன் தரு
ஆழியதை எடுத்துவிட்டேனே ஓ பீமசேனா
நாழிகை மூன்மாளப்போகுறாய் ஓ பீமசேனா
பீமன் தரு
செதாயுதம் தன்னைவிட்டேனே கோபாலகிருஷ்ணா
சதமாகக்கொல்லும் உந்தனை கோபாலகிருஷ்ணா
பொது வசனம்

இவ்விதமாக கிருஷ்ண மூர்த்தியும் பீமசேனனும் ஒருவர்க்கொருவர் சண்டை இட்டுக்கொண்டிருக்க அந்த சமையத்தில் நாரதர் கைலாயம் நாடிச் செல்லுவது ।

நாரதர் தரு
மாயன்பீமன சண்டைசெய்யவே நாரதமுனி
மாயோஸ்பரன்பாதம் காணவே இந்தநாரதரும்
நேயமாக ஓடிவாராரே கலகம்செய்ய
நிலமனிடம் பாதம்போற்றியே இந்த நாரதரும்
சண்டையை சமதானம் செய்யவே பரமனிடம்
சந்தோஷமாய் ஓடிவாராரே இந்த நாரதரும்
காடுமலை வனமும் தாண்டியே கைலாயங்கிரியை
கண்டு சந்தோஷம் கொண்டாரே இந்த நாரதரும்
பொது வசனம்

இவ்விதமாக நாரதர் பரமனைககாணும் பொருட்டு கைலாயம் செல்ல அப்போது கைலாயத்தில் வாசமாகிய முக்கண் படைத்த பரமசிவம் தர்பார் நாடி வருகின்றார்

பரமன் வருகிற விருத்தம்

உலகிலுள்ள ஜீவருக்குபடியளக்கும் நாதன்
பத்தமர்கள் நெஞ்சதில் அமர்ந்திடும் போதன்
கலைமுடைய வேடனையும் கார்தத நீதன்
நங்கையாள் பார்வதிக்கு வாமபாகன்
கலைலையுங் கற்றுணர்ந்த திருவெண்காடாருக்கு
பாலனாய் அவதரித்து முத்திதந்தேன்
ஜலமதையே சிரமீதில் வைத்த நாதன்
மாம்பசிவ மூர்த்தியும் வருகின்றேனே

தரு

ஆதிக்கைலாச வாசர்வந்தார் இந்த
அவனியைவெருத்திடும் தவநிலையன்பர்க்கு
சோதியாய் நின்றுவரம் தந்தார்
வேதமறைமுடிவில் விளங்கும் பரமநாதன்
மாது பார்வதிசெங்கை மனமகிழ்ந்திடும் நீதன்
சுள் மனுமுறை நெறியுணர் ஜனகாதியர்க்கு
கனமுடன்மேலான நிலையதைகாட்டினேன் ஆ
மன்னன் சிறுதொண்ட பக்தன் தன்னை அவன்
மனமது அறிந்திட எனதுருநீக்கி
சந்யாசியாக வந்தேன் முன்னே
தன்னியமறையில் வல்லசுதனைக்கறிசமைத்து
நன்னயமுடனளித்தால் நானும்புசிப்பேனென்றேன்
சுள் நத்தியே அன்பனும் பக்தியாய் படைக்க
கர்த்தனும் மறைந்துமே முத்தியும் தந்தேன் ஆ
ஆலகாலத்தையுண்டநாதன் என்னை
அந்திர தேவர்கள் சிந்தையில் போற்றிட
மேலும் துயரைத்தீர்த்த போதன்
பாலன் மார்கண்டனுக்காய் காலன் தனையுதைத்தேன்
பரிவா என்றைக்கும்பதி நாறு வயதளித்தேன்
சுள் பாரினில்மகம்புரி தாருகாரிஷியின்
நாரியாகர்ப்பினை கூறியேகொடுத்தேன் ஆ
சுந்தரன் தனக்குத்தூதுசென்றேன் அந்த
தோகையாள் சங்கிலி நாச்சியாள் தன்னை
வந்து மணம்முடித்து நின்றேன்
நந்திமத்தளம் கொட்ட நாரதர் வீணைமீட்ட
சந்ததம் குரவில்லரமல் சதுர்முகன் தாளம் தட்ட
சுள் சத்திகாளியோ டாடியே நின்றவர்
பக்தர்சித்தர்க்கு முத்தியை யளித்தவர்

பரமன் கவி

நந்தியே சொல்லைககேளாய் நவிலுவேன் சேதியொன்று
விந்தையாய் வருவோர்க்கெல்லாம் வில்லனுக்ர மோக்ஷ
[மதை
முந்தியே அளிக்கவேண்டும் முக்கண்ணி தேவிமேபாடு
இந்ததோர் பொற்பீடத்தில்யிருக்கலாம் இருக்காரே

நாரதர் தரு

சத்திஉமையாள்பாகனே உன்பாதம்
தவமுனி பணிந்தேனே யோகனே
இத்தலமதை சுற்றி இன்பமாய் வரும்போது
உத்தமமா ஒருசேதி நத்தியே கண்டேனே

பரமன் தரு

கல்விமகள்தன் பாலனே நீயும்
களிப்புடன் வாழ்குவாய் லோலனே
அல்லலான சேதி எல்லையில் நடந்ததோ
சொல்லுவாய் எனக்குமே நல்ல மனதுடன்

நாரதர் தரு

சொல்மணமது வாடுதே அந்த
சுந்திரா சேதியைத் தேடுதே
நல்லசித்தி புத்தி நாதன் சிந்தூரனோடு
வல்லமையரியவே சண்டையும் செய்தாரே

பரமன் தரு

சண்டையில் ஜெயித்தவர்யாரு அந்த
சாதிப்பாய் எனக்குமே பேரு
அண்டபுவனம போற்றும் அரனும் அரியவே
விண்டிடவேண்டுமே விமலனும் பிரியவே

நாரதன் கவி

அரக்கனும் சிந்தூரனோடு ஐங்கரத்தோனுங்கூடி
சிரக்கவே சண்டைசெய்து செத்துமே போனதாக
திரமாக வருகும்போது தேவர்கள் சொல்லைக்கேட்டு
ரமாக உனக்கு ஓத ஓடியே வந்தே நிந்து

பரமன் தரு

எந்ததோர் இடத்தினில் சண்டைகள் செய்தார்
எனக்கறிய சொல்லவேண்டும் நாரதனே அந்த
சிந்தூரன் இருக்கும் விடம் சீரதனே

நாரதர் தரு

அஸ்த்தினபுரிபட்டணமருனில்
அசுரனுட சண்டை செயவதாய் தாத்தாவே இப்போ
அமரரும் சொன்னரெனக்கு தாத்தாவே

பரமன் தரு

சண்டைகள் செய்கின்ற இடமதை பார்க்கவே
தாண்டியே செல்லவேண்டும் நாரதனே நீயும்
வேண்டியே வந்திடுவாய் பேரதனே

நாரதன் தரு

தாத்தா உன் எண்ணம் போல் தவமுனி வருகின்றேன்
சேர்த்தியாய் நடந்திடுவோம் பரமனரே அந்த
பார்த்துமே வந்திடுவோம் சிவனரே

பரமன் தன் வழிநடை

வாருமே நாரதா என்பின்னே நீருமே
வள்ளலுடன் அல்லலில்லாமல்
எல்லைபுகழ செல்லுவோம் நாமுமே

நாரதர் தரு

யீசரே வரேகிப்போ கைலாசரே
நேசமாய் சூரன் பாசமாய் சண்டை
செய்கின்றயிடம் காண்பேர்ம நாமுமே

பரமன் தரு

காடு செடி மலை வனமும் தாண்டினேம்
கங்கையணியும் சங்கரன்நான்
கணபதி சண்டைசெய்யிடன். எங்கையோ

நாரதர் தரு

தெரியுதே சண்டை செய்கின்ற யிடமும்
கரியையுரித்த பிரியமான
கர்த்தரே சென்று வாரும் நீருமே

நாரதர் கவி

சந்திர சடையணி சங்கரா சொல்லக்கேளீர்
அந்ததோ யிடம்தன்னில் அசுரனும் சிந்தூரனே
உந்தனின் மகனென உலகம்போற்றும் விநாயகன்தான்
விந்தையாய் யுத்தம்செய்கின்றான் விமலனே கண்டுவாரீர்

பொது வசனம்

இவ்விதமாக நாரதனானவன் கைலாயம் சென்று விநாயகக் கடவுளானவர் சிந்தூரனேடு சண்டைசெய்து மாண்டார் என்று சொல்லி மறுபடி மாளவில்லை சண்டைசெய்துக் கொண்டே இருக்கின்றார் வாரும் பார்ப்போம் என்று தந்திரமாக அழைத்துவந்து அஸ்தினபுரி அருகாமையில் விட்டு கிருஷ்ணனும் பீமனும் சண்டை செய்கிறவிடத்தைக் காட்டி அவர்கள் தான் விநாயகனும் சிந்தூரனும் என்றுசொல்லி அனுபவிட பரமன் யுத்தகளத்திற்க்கு வந்துக்கொண்டிருக்க அந்த சமையத்திலும் பீமனும் கிருஷ்ணனும் சண்டை செய்துக்கொண்டே யிருப்பது

கிருஷ்ணன் தரு சண்டை

எந்தனுழியது உந்தன்கெதையை வெல்லுமே
நொதத்திட உந்தனை கொல்லாமல் விடுவேனோ ஆழியுமே
சு. ள் நோக்கியே அனேகபாணம் தாக்கியேவிடுத்தேன்
சீக்கிரம் யிப்போது வாங்குவேன் உயிரை

பீமன் தரு

விட்டகெதையது தட்டாமல் ஆழியை வாட்டுமே
மட்டில்லா உனை அந்தரத்தில் தூக்கி ஆட்டுமே
சு ள் மாடாடு மேயத்திட்ட நாடோடிபையலே
கேடாகுடமாக யேண்டாபேசுறாய் வீணை

கிருஷ்ணன் தரு

என்னேரம் சமர் செய்தாலும் ன்னை வெல்லவும் [போகுமோ
உன்னை நொடிக்குள்ளாக இன்று சின்னங்களாக செய் [புமே
சுள் அன்னைகுந்தியவள் என்னை தடுத்திட்டாலும்
உன்னைக்கொல்லாமல் பின்னப்படுவேனோ

பீமன் தரு

இந்த உலகினில் எந்தனை வெல்லுவார் யாரடா
சிந்தைமகிழ்ந்துமே உந்தனைகொல்லுவேன் பாரடா
சுள் சீரா அனேக்கனை நேராவிடுத்தேனிதோ
பாரா உந்தனைக்கொன்று துரியனை வாட்டுறேன்

ப்ரமன் கவி

மைத்துனை போதும் மல்லகை நிருத்து மிப்போ
மெத்தவேயிருவர்கூடி மேன்மையாய் சண்டைசெய்தால்
உத்தமா எங்களுக்கு உரைத்ததோர் சபதம் தானும்
சித்தமாய் முடிவதெப்போ சீதரா சொல்லுவீரே

பரமன் வசனம்

மைத்துனை போதும் போதும் சண்டையை நிறுத்தும் இப்போது நீ பீமனுடன் சண்டை செய்தால் ஆதியில் எங்களுக்கு பிரமகபாலத்திற்கு உதிரம் பாலிக்கும் பொருட்டு பற்பல அவதாரம் செய்வதாக தெரிவித்து இப்போது பாரத ஆரப்பத்திலேயே பாண்டவர் மீது யுத்தம் செய்வதற்கு தாங்களே கங்கணங் கட்டிக் கொண்டால் பின்னல் நடக்க வேண்டிய பாரதபோரானது எப்படி முடியும் நான் அந்த படுபாவிகளாகிய துரியோதனாதிகள் கண்ணுற்குத் தெரியாமல் இங்கு வந்தேன் ஆனபடியால் நீங்கள் செய்கின்ற யுத்தத்தை நிருத்தி சமாதானமாக போங்கள் மைத்துனை

கிருஷ்ணன் கவி

பரமனே சனை... யாது பலாட்டையுடனே நானு
திரமாய் செய்க சீரணர் தேவரீர் தன்னைக்காண
உரமாக பின்நடக்கும் யுத்தமாம் பாரதத்தில்
தரமாக இருந்து நீர் காப்பதாய் வாக்குத்தாரீர்

வசனம்

ஆனால் கேளும் மைத்துனை நானும் பீமனும் சண்டை செய்துக்கொண்ட காரணம் என்னவென்று ... தங்களைக் கண்டு பின்னல் நடக்கவேண்டிய பாரத யுத்தமானது பாண்டவர்களுக்கு ஜெயம் சித்திக்கும் பொருட்டு நாங்கள் ...

சமர் செய்துக்கொண்டோமே தவிர வேறொன்றுமில்லை ஆனல் நாங்கள் பாண்டவர்கள் ஜெயம் பெரும்படியாண வரங்களைத்தர வேண்டும்மைத்துன ஆனல் பீமசேன இதோ சுவாமி வந்துவிட்டார் நமஸ்காரம் செய்துக்கொள்ளும் மைத்துன

பீமன் கவி

ஆலமதையுண்டயீசா அடியவன பாதம்போற்றி
கோலமாய் எந்தநாளும் குழந்தையாம் எங்களுக்கு
சீலமாக பக்கத்துனே இருவர்க்கு யிருந்து நீங்கள
காலனைவென்றதேவா கடைதேரவைப்பீர் சுவாமி

பரமன் கவி

அப்பனே மேசேன அதற்குமே அஞ்சவேண்டாம்
தப்தேம் நேர்ந்திடாமல் தர்மனேடுங்களையும்
கொப்பனயிருந்துநாலும் கூடவே காப்பேனப்பா
செப்பெரும் மாயவா சென்றுமே வாறேன் நான்

வசனம்

ஆனல்கேளும் மேசேன பின்னல் நடக்கின்ற பாரதயுத்தத்தில் உங்கள் ஐவருக்கும் ஒருவித உயிர் சேதனையில்லாமல பாதுகாத்து வருகின்றேன் ஆனல் மைத்துன நீ கேட்ட படியே வரம் தந்துவிட்டேன் நான் சென்று வருகின்றேன்

வாழி விருத்தம்

எழில் பெரும் இன்நாடகம் எழுதினோர் வாழி
இசைபொருத்தம் செய்தோரும் மிகவே வாழி
பிழையில்லாமலிதை அச்சிட்டோரும் வாழி
பிரசிக்க உலகினில ஆடினோர் வாழி
கழையாமலிதனைக் கேட்டோரும் வாழி
கண்ணன் பிர்பா யீசனும் வாழி
குழையாமல் வீரப்பதாசன் வாழி இதை
கூறிய ராஜகோபாலர் குவலயம் வாழி வாழி

பெருந்திருவாள் கலியாண மென்னும்
கிருஷ்ணன் வீமன் சண்டை நாடகம்
முற்றிற்று

சுபம் சுபம் சுபம்

சீனிவாச அச்சகம் குளை சென்னை-1